உ

சிவமயம்



# துறைசைச் செங்கோலும் இந்திய சுதந்திரமும்

# THURASAI SCEPTER IN INDIA'S INDEPENDANCE



## GOLDEN SCEPTER

திருவாவடுதுறை ஆதீனம்

2022

உ
சிவமயம்

# துறைசைச் செங்கோலும்
# இந்திய சுதந்திரமும்



இந்நூல்
75 ஆவது சுதந்திர தினத்தின் சிறப்பு விழா மலராக
**திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம் திருவாவடுதுறை ஆதீனம்**
24 ஆவது குருமகா சந்நிதானம்
**ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள்**
அவர்களின் அருளாணயின் வண்ணம் வெளியிடப்பெற்றது.

மெய்கண்டார் ஆண்டு 799
சுபகிருது ஆண்டு, ஆடி மாதம் 30 ஆம் நாள் திங்கட்கிழமை
**(15.08.2022)**

# பொருளடக்கம்

# குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணை
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழில்திருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

– காஞ்சிப்புராணம்.
(மாதவச் சிவஞான யோகிகள்)



SRIMATH MADHAVA SIVAGNANA SWAMIGAL
MAHA BHASHYA KARTAR



திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம் திருவாவடுதுறை ஆதீன குருமுதல்வர்

ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள்

FOUNDER OF THE THIRUVAVADUTHURAI MUTT

SRI NAMASIVAYA MOORTHIGAL

உ

சிவமயம்

## திருக்கயிலாய பரம்பரை திருவாவடுதுறை ஆதீனம்
## 20 – ஆவது குருமூர்த்திகள்
## 20TH GURUMOORTHIGAL



# ஸ்ரீ அம்பலவாண தேசிகர்
# SRI AMBALAVANA DESIKAR

அருளாட்சி காலம்: 1937 – 1951



திருவாவடுதுறை ஆதீனம் 24 – ஆவது குருமகா சந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள்

24TH GURUMOORTHIGAL

SRI- LA- SRI AMBALAVANA DESIKA
PARAMACHARIYA SWAMIGAL

உ
சிவமயம்

# பதிப்புரை

முத்தேவ ராதி புலவோரும் விண்ணின் முழுதுஇன் பகற்றி அருளின்
பித்தேறி நின்ற முனைவன் பதங்கள் பெருகன்பினோடு பணியும்
அத்தேய மான உயர்பார தத்தின் அறிவின்றி வாழ்க்கை அணவி
செத்தாரின் வேறும் அலராகி உய்திதெரியார் இதென்கொல் அறிவே.
- கவிராட்சச ஸ்ரீ கச்சியப்ப முனிவர்.

நம் இந்தியநாடு விடுதலைப்பெற்று 75 ஆண்டுகள் நிறைவடைந்து பவளவிழா கொண்டாடப்பட்டு வருகின்றது. இந்த இனிய தருணத்தில் விடுதலை போராட்ட வீரவரலாற்று நிகழ்வுகளையும், சுதந்திர இந்திய அரசாங்கம் நம் ஆதீனத்தால் செங்கோல் வழங்கி அருளப்பெற்றுத் தொடங்கிய புனித நிகழ்வையும், சுதந்திர இந்தியா மேன்மேலும் வளர்ச்சி அடைய அவ்வக் காலங்களில் நம் ஆதீனம் ஆற்றி வருகின்ற சீரிய நற்பணிகளையும் தொகுத்து வழங்குவது இந்நூலாகும். ஆகையால் பவள விழா சுதந்திரநாளைப் பார் போற்றக் கொண்டாடும் நம் தமிழ்மக்கள் யாவரும் இந்நூலைப் படிக்க வேண்டியது அவசியமாகும்.

இற்றைஞான்று நம் திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம் திருவாவடுதுறை ஆதீனத்தில் அருளாட்சிசெய்துவரும் 24 - ஆவது குருமகா சந்நிதானம் அவர்கள் ஆதீனத்தின் அருட்பாரம்பரியத்துக்கேற்ப சமயப் பணிகளையும், சமுதாயப் பணிகளையும் நாடு போற்ற நன்முறையில் ஆற்றியருளி வருகின்றார்கள்.

நாம் அனைவரும் இறைபக்தியும், தேசபக்தியும் இனிதே வளர்த்து நம் ஆன்மவிடுதலையின் பொருட்டுக் குருவருள் வழிநிற்க இந்தச் சுதந்திர நாளில் உறுதி கொள்வோமாக. இந்நூல் பதிப்புப் பணியில் அடியேனையும் ஆட்கொண்டு அருளிய ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களின் பொன்னார் திருவடிகளைப் போற்றி வணங்குகிறேன்.

திருவாவடுதுறை
08.08.2022

இங்ஙனம்,
சிவஞான சுவாமிகள் அடிப்பொடி
**சு.குஞ்சிதபாதம்,**
ஆதீனப்புலவர்

உ
சிவமயம்

# முகவுரை

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் 14 ஆம் நூற்றாண்டில் ஸ்ரீ நமசிவாய மூர்த்திகளால் தோற்றுவிக்கப்பெற்றது. ஆன்மீகப் பணியோடு சமுதாயப் பணியினையும் அந்நாள் முதல் இந்நாள் வரை செம்மையாக செய்து வருகிறது இவ்வாதீனம். பாருக்குள்ளே நல்ல நாடு எனப் போற்றப்படும் நமது பாரத தேசம் அந்நியர்கள் ஆட்சியின் பிடியிலிருந்து 1947 ஆம் ஆண்டில் சுதந்திரம் பெற்றது. அச்சுதந்திரத்தினை ஆங்கிலேயர் கையால் வாங்கக்கூடாது என்று கருதி, குருவின் பொற்கரங்களால் பெற முடிவு செய்தார் ராஜாஜியின் வேண்டுகோளின்படி முதல் பிரதமரான நேரு அவர்கள். அதன்படி நமது திருவாவடுதுறை ஆதீனத்தை அணுகியபோது அன்றைய நாளில் ஆதீனத்தில் அருளாட்சி புரிந்துவந்த 20 ஆவது குருமூர்த்திகள் அவர்கள் தங்கச் செங்கோலுடன் ஓதுவாமூர்த்திகள், ஆதீன முக்கியஸ்தர்களை அனுப்பி நேரு அவர்களிடம் செங்கோலை வழங்க, தேவார இசை முழங்க ஆட்சி மாற்றம் நிகழ்ந்தது. இத்தகு வரலாற்றுச் சிறப்புமிக்க சுதந்திரத் திருநாள் திருவாவடுதுறை ஆதீனம் மூலம் நிகழ்ந்தேறியது என்பதனை உலகோர் அறிந்துகொள்ளும் பொருட்டு இவ்வரிய நூல் வெளியிடப்படுகிறது.

இத்தகைய அரிய நிகழ்வுகளை அனைவரும் அறிந்துகொள்ளும் பொருட்டு தற்போது அருளாட்சி புரிந்துவரும் **24 ஆவது ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம்** அவர்கள் 75 ஆவது சுதந்திர நாளில் **"துறைசைச் செங்கோலும் இந்திய சுதந்திரமும்"** எனும் நூலை வெளியிட அருளாணை வழங்கியருளியுள்ளார்கள். அவர்களின் அருளாணையின் வண்ணம் செங்கோல் சிறப்பு, சுதந்திரத்திற்கு முன் இந்தியாவின் நிலை, திருவாவடுதுறை ஆதீனத்தின் சமுதாய பணிகள், அரிய பல புகைப்படங்கள், நாளிதழில் வெளிவந்த செய்திகள் ஆகிய பலவும் சேர்க்கப்பட்டு அழகிய நூலாக வெளிவருகிறது.

இவ்வரிய நூலினை அன்பர்கள் யாவரும் படித்து இன்புற வேண்டுகிறோம். இந்நூற் பதிப்புப் பணியில் ஈடுபட்ட ஆதீன மேனிலைப்பள்ளி தலைமையாசிரியர் திரு. மு.ஞானமூர்த்தி, ஆதீனப்புலவர். திரு. சு.குஞ்சிதபாதம், உதவித் தலைமையாசிரியர் திரு. ப.மகாலிங்கம் ஆகியோருக்குக் குருவருள் துணைநிற்கும். இந்நூலை 15.08.2022 அன்று 75 ஆவது சுதந்திர தின விழா மலராக வெளியிட அருள்பாலித்த ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களின் பொன்னார் திருவடிகளை மனம், மொழி, மெய்களால் வணங்கி மகிழ்கின்றேன்.

இங்ஙனம்,
**சே.ஜெயசெல்வன்,**
தமிழாசிரியர், திருவிடைமருதூர்.

உ
சிவமயம்

# ஆதீனத்தின் அருட்பணிகள்

முடிமன்னர் மூவர்க்கும் பின் அமிழ்தினும் இனிய நம் செந்தமிழ் மொழியினையும், சிவநெறியினையும் திருக்கோயில் முதலிய அறநிலையங்களையும் புரந்தருளும் பெருமைக்கு உரியவனாக விளங்குவன சைவ ஆதீனங்கள். அவற்றுள் பழமையும், பெருமையும் வாய்ந்து சிறப்பது **திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம் திருவாவடுதுறை ஆதீனம்**. குறுநில மன்னர்களும், செல்வப் பிரபுக்களும், மக்கள் நெறியான வாழ்வில் மேன்மைபெற ஆதீனத்தின் அருட்பணிகள் வளர்ந்தோங்க வேண்டும் என்னும் நல்லெண்ணத்துடன் நில புலன்கள் முதலிய சொத்துகளை ஆதீனத்திற்கு உரியவனாகச் செய்து மகிழ்ந்தார்கள். துறவற அரசர்களாம் ஆதீன கர்த்தர்களாகிய மகா சந்நிதானங்களும் மக்களின் இம்மை, மறுமை, வீடு என்னும் மும்மை வாழ்விலும் இன்பம் மலிதற்கு ஏதுவான நல்லறங்கள் பலவும் தழையச் செய்து வருகின்றனர். இவ்வண்ணம் தோற்றம் பெற்ற காலம் முதலாகத் திருவாவடுதுறை ஆதீனம் அரசுடன் இனிய தொடர்பு கொண்டு விளங்கி வருகிறது.

நமது இந்திய நாடு அடிமைத்தளையில் அகப்பட்டு அயல் நாட்டவரிடன் ஆளுகையில் வந்தமையை யாவரும் அறிவர். காந்தியடிகளின் நேரிய முயற்சிகளால் நாடு விடுதலை பெற்றுச் சுதந்திரம் ஏற்ற திருநாள் **14.08.1947** இரவு ஆகும். இந்திய பிரதம மந்திரியாக மாட்சி மிக்க பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள் பொறுப்பேற்றார்கள். அப்பொழுது நமது ஆதீனத்து 20- ஆவது குருமகா சந்நிதானமாக ஞானபீடத்தில் வீற்றிருந்தருளிய **ஸ்ரீ அம்பலவாண தேசிகர்** அவர்கள் சைவ சமயத்தின் சின்னமாகிய இடபத்துடன் கூடிய தங்கச் செங்கோலை ஆதீனத்து பெரிய தம்பிரான் சுவாமிகள், ஓதுவாமூர்த்திகள், முக்கியகாரியஸ்தர்கள் முதலியவர்களை அனுப்பி நேரு அவர்களிடம் சேர்ப்பிக்கும்படி செய்தார்கள். அவர்களும் அரசுப் பொறுப்பேற்கும் அத்தருணத்தில் மக்களுள் மாணிக்கமாகிய நேரு அவர்களிடம் ஆதீனம்

குருமுதல்வர் ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள் விபூதி, மாலைப்பிரசாதங்களையும், "**தங்கச் செங்கோல் தங்கள் செங்கோல் எங்கள் ஆட்சி சின்னம்**" என்றுக் கூறி பீதாம்பரம் அணிவிக்க ஓதுவாமூர்த்திகள் "**அரசாள்வார் ஆணை நமதே**" என்ற ஞானசம்பந்த சுவாமிகள் தேவாரங்களைப் பண்பொருந்தக் பாடினார்கள். பதவியேற்பு இனிது நிகழ உலகு மகிழ்ச்சி வெள்ளத்தில் திளைத்தது.

பெருமைகளுக்குரிய **இராஜேந்திர பிரசாத்** அவர்கள் இந்திய அரசில் பொறுப்பேற்பதற்கு முன் ஆதீன மடாலயத்திற்கு வருகை புரிந்தார்கள். குருமகா சந்நிதானம் **ஸ்ரீ அம்பலவாண தேசிகர்** அவர்கள் இராஜேந்திர பிரசாத் அவர்களை ஆதீன மரியாதைகளுடன் வரவேற்று இனிது கலந்துரையாடி மகிழ்ந்து அவர்களிடம் **கஸ்தூரிபா நிதிக்காக ரூ. 35,000/-** (ரூபாய் முப்பத்தையாயிரம்) வழங்கியருளினார்கள். மொழி பெயர்ப்பாளரின்றி, மறுமுறை வருகைதரும்பொழுது தமிழில் பேசி மகிழ்விக்க வேண்டும் என அப்பொழுது மகாசந்நிதானம் அவர்கள் பிரசாத் அவர்களிடம் கூறினார்கள். மகா சந்நிதானம் அவர்கள் அன்பின் உயர்நிலையினைப் புலப்படுத்தும் இனிய நிகழ்வு இது.

ஆதீனத்து 21 – ஆவது குருமகா சந்நிதானம் **ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர்** அவர்கள், உள்ளதை உள்ளபடி காலப்போக்குக்கும் உலக நடைக்கும் ஏற்றபடி நடத்துவதே அறநெறி என்பதை நன்றாக அறிந்தவர்கள். இவர்களது ஆட்சிக்காலத்தில் நாட்டிற்குப் போரினை எதிர்கொள்ளும் அச்சநிலை எழுந்தது. நடுவண் அரசு பாதுகாப்பு நிதி திரட்டியது. ஆதீனத்தின் பங்கு சிறப்பாக அமையத் திருவுளம் கொண்டார்கள். மகாசந்நிதானம் அவர்கள் அகில இந்திய காங்கிரஸ் தலைவராக விளங்கிய திரு. **காமராசர்** அவர்களை ஆதீனத்திற்கு வரவழைத்து **இந்தியப் பாதுகாப்பு** நிதிக்கு ஆதீன நன்கொடையாக **ரூ.65,000 (ரூபாய் அறுபத்தையாயிரமும்), 3,315 (மூவாயிரத்து முந்நூற்றுப் பதினைந்து) கிராம் தங்கமும்** வழங்கியருளினார்கள்.

சீனப்படையெடுப்பு, பாகிஸ்தான் படையெடுப்பு நடந்த காலங்களில் இவ்வாறு பொன்னும் பொருளும் கொடுத்து உதவியதோடு, ஆந்திரவெள்ளம், அஸ்ஸாம் பூகம்பம், கேரள மாநில பஞ்சம், தமிழகப் புயல் வெள்ளச் சேதம் முதலிய இயற்கைச் சீற்றங்களால் அவதி நேரிட்ட காலங்களில் மிகத் தாராளமாக உதவிகள் செய்துள்ளார்கள்.

ஆதீனத்து 22- ஆவது குருமகா சந்நிதானம் **ஸ்ரீ அம்பலவாண தேசிகர்** அவர்களை **இந்தியப் பிரதமர். மொரார்ஜி தேசாய்** அவர்கள் சந்தித்து ஆசி பெற்றார்கள்.

ஆதீனத்து 22- ஆவது குருமகா சந்நிதானம் **ஸ்ரீ அம்பலவாண தேசிகரவர்கள்** திருமயிலை திருவான்மியூர் தல வழிபாடுகளுக்குச் சென்றிருந்தார்கள். அச்சமயம் **இந்தியப் பிரதமர். இந்திராகாந்தி அம்மையார்** சென்னைக்கு விஜயம் செய்திருந்தார்கள். மகா சந்நிதானம் அவர்களை கிண்டி ஆளுநர் மாளிகை மேல்மாடியிலிருந்த அம்மையார், மகா சந்நிதானம் அவர்கள் வீற்றிருந்த இடத்தில் வந்து தரிசித்தும் உரையாடியும் மகிழ்ந்தார்கள். குருமகாசந்நிதானம் அவர்கள் ஆதீன அருட்பிரசாதங்கள் வழங்கி சாதரா அணிவித்து நாடு மேன்மைகள் பெற்றிட வாழ்த்தியருளினார்கள்.

(20.02.1978) அன்று **தமிழக ஆளுநர்.** மேதகு.**பிரபுதாஸ் B.பட்வாரி** அவர்கள் சந்தித்து அருளாசி பெற்றார்கள்.

ஆதீனத்து 23 ஆவது குருமூர்த்திகள் **ஸ்ரீ சிவப்பிரகாச தேசிக மூர்த்திகள்** அவர்கள், தங்கள் முன்னைக் குருமூர்த்திகளின் நெறிமுறைகளைக் கடைபிடித்து ஒழுகி வருபவர்கள். குடியரசுத்தலைவர், பிரதம மந்திரி என்று இவர்கள் பதவியேற்பு முதலாய முக்கிய நிகழ்ச்சிகளின் பொழுது ஆதீன அருட்பிரசாதங்களைச் சேர்ப்பிக்கச் செய்து வருதலோடு மக்களிடையே வேறுபாட்டுணர்வும் உயர்வு தாழ்வு பாராட்டும் மனப்போக்குகளும் தவிர்வதற்கான தேவையான அருஞ்செயல்கள் பலவும் ஆற்றி நலம் பெருக்கி வருகின்றார்கள்.

ஆதீனத்து 24 ஆவது குருமகா சந்நிதானமாக ஞானபீடத்தில் எழுந்தருளி அருட்செங்கோல் ஓச்சிவரும் **ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள்** அவர்கள் அருளாட்சியில் ஆதீனத் திருக்கோயில்கள், குருமூர்த்தத் திருக்கோயில்கள் சிறப்பாகத் திருப்பணி செய்யப்பெற்றுவருகின்றன. மகா கும்பாபிஷேகப் பெருவிழா தொடர்ந்து நடைபெற்று வருகின்றது. ஆதீனக் கிளை மடங்களையும், தலைமை மடத்தையும் செவ்வனே புத்தாக்கம் செய்தருளி வருகின்றார்கள்.

சைவ சித்தாந்த சைவத் திருமுறை நேர்முகப் பயிற்சி மையங்கள் மேன்மேலும் பெருகிச் சிறப்பாக நடந்து வருகின்றன. மேனிலை வகுப்புகளையும் நடைபெறுமாறு அருளியுள்ளார்கள்.

ஓதுவா மூர்த்திகள், சிவாச்சாரியார்கள், சித்தாந்த அறிஞர்கள், தமிழ் அறிஞர்கள் எனப் பல்துறையினருக்கும் விருதுகளும், பொற்கிழியும் வழங்கி அவரவர் துறைகளில் ஊக்குவித்து அருள்கின்றார்கள்.

மாணவர்களின் கல்வி வளர்ச்சிக்கு உதவித்தொகையும், பரிசுகளும் வழங்கியருள்கின்றார்கள்.

**பெருவெள்ளம், கஜா புயல், கொரோனா தொற்று** காலங்களில் அரசாங்கத்திற்கு நிதி உதவி அளித்ததோடு மட்டுமன்றித் தாமே நிவாரணப்பொருள்களும் வழங்கியருளி உள்ளார்கள்.

திருக்குறள், திருமுறை, இலக்கணம், சைவ சித்தாந்தம், புராணம் எனப் பல்துறை சார்ந்த விரிவுரைகளையும் இணையவழியில் இலவசமாக யாவரும் கேட்டுப் பயன் பெறும் வண்ணம் பரிபாலனம் செய்தருளி வருகின்றார்கள்.

திருமுறை , சாத்திரம் தொடர்பான நூல்களைத் தொடர்ந்து வெளியிட்டருள்கின்றார்கள். சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையத்தைத் திரு.ச.கந்தசுவாமி அவர்கள் மூலமும், சைவத்திருமுறை நேர்முகப் பயிற்சி மையத்தைத் திரு. சபா. சண்முகசுந்தரம் அவர்கள் மூலமும் இயங்கச்செய்து வருகின்றார்கள்.

சைவ உலகமும், தமிழ் உலகமும் போற்றும் வகையில் இவர்களின் அருளாட்சி சிறப்பாக நடைபெற்று வருகின்றது.

## சமுதாயப் பணிகள்

தமிழகத்தை தாக்கிய **கஜா புயல்** நிவாரணமாக (07.12.2018) அன்று திருவாவடுதுறை ஆதீனம் சார்பில் 24 ஆவது குருமகா சந்நிதானம் அவர்கள் அன்றைய தமிழக முதல்வர். திருமிகு. **எடப்பாடி. கே. பழனிசாமி** அவர்களிடம் **ரூ.10,00,000** பத்து லட்சத்திற்கான காசோலையை வழங்கி அருளினார்கள்.

தமிழகத்தில் பரவி வந்த **கொரோனா** நோய் தொற்றில் இருந்து தமிழக மக்களின் நலன் காக்க முதற்கட்டமாக 24 ஆவது குருமகா சந்நிதானம் அவர்கள் மயிலாடுதுறை வருவாய் கோட்ட அலுவலர் அவர்களிடம் **ரூ.12,00,000** பன்னிரண்டு லட்சத்திற்கான காசோலையை வழங்கி அருளினார்கள்.

**கொரோனா** நோய் தொற்றில் இருந்து தமிழக மக்களின் நலன் காக்க இரண்டாம் கட்டமாக திருவாவடுதுறை ஆதீனம் சார்பில் 24 ஆவது குருமகா சந்நிதானம் அவர்கள் அருளாணையின் வண்ணம் ஸ்ரீமத் திருச்சிற்றம்பலத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் தமிழக முதல்வர். திருமிகு. **மு.க.ஸ்டாலின்** அவர்களிடம் **ரூ.15,00,000** பதினைந்து லட்சத்திற்கான காசோலையை வழங்கி அருளினார்கள்.

(19.04.2022) அன்று திருவாவடுதுறை ஆதீன தலைமை மடத்திற்கு தமிழக ஆளுநர் மேதகு. **ஆர்.என்.ரவி** அவர்கள் வந்திருந்து **ஸ்ரீலஸ்ரீ 24 ஆவது குருமகா சந்நிதானம் அவர்களை** சந்தித்து சுதந்திர செங்கோல் சிறப்பினை பற்றி கேட்டறிந்து சென்றார்கள்.

1947 - ஆம் ஆண்டு நாடு சுதந்திரம் பெற்றபொழுது ஆதீனம் குருமுதல்வர் ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள் அருட்பிரசாதமாக அனுப்பி வைக்கப்பெற்ற தங்கச் செங்கோல் என்றும் நல்லாட்சி நிலவச் செய்து இன்பம் பெருக்கவும், நாடு அணி விழாக்கள் பலகண்டு உலகு மகிழத் திகழவும் குருவருளும் திருவருளும் துணை நிற்க வேண்டுகிறோம்.






தெலுங்கு மொழி தொலைக்காட்சியில் **திருவாவடுதுறை ஆதீனம் செங்கோல் சிறப்பு** குறித்த நிகழ்ச்சி **26.06.2022** அன்று ஒளிபரப்பு செய்யப்பட்டது.

### 1947 - பாரத நாட்டின் சுதந்திர நாளில் -

### ஆட்சிமாற்றத்தை அடையாளப்படுத்திய

### தமிழ் வளர்க்கும் திருவாவடுதுறை ஆதீனம் வழங்கிய

# தங்கச் செங்கோல் சிறப்பு

1947 - ம் ஆண்டு ஆகஸ்ட் 15-ஆம் தேதி இந்தியாவுக்குச் சுதந்திரம் கிடைத்த சரித்திர நிகழ்வில், தமிழகத்தைச் சேர்ந்த திருவாவடுதுறை ஆதீன மடத்துக்குக் கிடைத்த பெருமையைப் பலரும் அறிந்திருக்க வாய்ப்பில்லை, அதைத் தெரிந்துகொள்வோம்.

இந்தியாவின் கடைசி ஆளுநராக இருந்த மவுண்ட் பேட்டன், நேருவை அழைத்து, இந்தியாவுக்குச் சுதந்திரம் கொடுக்கப் போகிறோம். அதை எப்படி அடையாளப்படுத்துவது என்று கேட்க, குழப்பம் அடைந்த நேரு, உடனடியாகப் பதில் கூறவில்லை. அடுத்து மூதறிஞர் ராஜாஜியை அணுகி, இதற்கு நீங்கள்தான் தீர்வு சொல்ல வேண்டும் என்று கேட்டுக்கொண்டாராம். உடனே ராஜாஜி, "கவலை வேண்டாம் தமிழகத்தில் மன்னர்கள் ஆட்சி மாற்றம் செய்யும்போது, ராஜகுருவாக இருப்பவர் செங்கோலைப் புதிய மன்னருக்குக் கொடுத்து ஆசீர்வதிப்பார். அதுபோல நாமும் மகான் ஒருவர் மூலம் செங்கோல் பெற்று ஆட்சிமாற்றம் அடையலாம்" என்று கூறியிருக்கிறார். அப்போது இந்தியாவின் சைவ மடங்களில் ஒன்றான திருவாவடுதுறை ஆதீன மடத்தின் 20 ஆவது குருமகா சந்நிதானமாக அருளாட்சி புரிந்த ஸ்ரீ அம்பலவாண தேசிக மூர்த்திகளை (1937- 1951) தொடர்பு கொண்ட ராஜாஜி, ஆட்சி மாற்றத்துக்கான புண்ணியச் சடங்குகளைச் செய்து தர பணிவுடன் கேட்டுக்கொண்டார்.

**தங்கச் செங்கோல்:**

அந்த நாளில் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள் கடும் காய்ச்சலில் இருந்தார். ஆனாலும் தமது தேக அசௌர்யத்தை பொருட் படுத்தாது, தற்போது நமது நாட்டிற்குக் கிடைக்கும் சுதந்திரத்தினை எண்ணியும், அதற்கு இவ்வாதீனம் சுதந்திர உரிமை பிரகடனத்தை உறுதி செய்ய நல்ல வாய்ப்பினை தந்த ஆதீன ஸ்தாபகாச்சாரியார் ஸ்ரீ நமசிவாய மூர்த்திகளின் பேரருளினை

எண்ணியபடி, உடனே ஆதீன காரியஸ்தர்கள் மூலமாக - சென்னையில் பிரபலமாக விளங்கிய உம்மிடி பங்காரு செட்டியார் நகைக் கடையில் சைவச் சின்னமாகிய ரிஷபம் அமர்ந்த நிலையில் விளங்க தங்கச் செங்கோல் தயாரிக்கப்பட்டு ஆதீன கர்த்தரிடம் சேர்ப்பிக்கப்பட்டது.

**டில்லி சென்ற பெருமக்கள்:**

மேற்படி டில்லியில் சுதந்திரம் பெறும் நிகழ்ச்சியில் கலந்து கொள்வதற்காக திரு. ராஜாஜி ஏற்பாடு செய்த தனி விமானத்தில், திருவாவடுதுறை ஆதீன மடத்தின் கட்டளைத் தம்பிரானான சடைச்சாமி என்ற திருவதிகை ஸ்ரீமத் குமாரசாமித் தம்பிரான் அவர்களும் மடத்தின் ஓதுவா மூர்த்தியான சைவத்திரு. மாணிக்கம் ஓதுவார் அவர்களும் மடத்தின் நாதஸ்வர வித்துவான் டி.என்.ராஜரத்தினம் பிள்ளை குழுவினரும், மேலும் திருமடத்தின் முக்கிய காரியஸ்தர்களும் டில்லி சென்றடைந்தனர்.

**ஆதீனத்தின் தெய்வீகச் சடங்கு:**

சுதந்திரம் பெறும் சமயம் கனம் டாக்டர். இராஜேந்திரபிரசாத் முன்னிலையில் ராஜாஜி, பண்டிட் ஜவகர்லால் நேரு, தியாகிகள் மற்றும் உயர் அதிகாரிகள் யாவரும் புடை சூழ 1947 - ஆம் ஆண்டு ஆகஸ்டு 14 - ஆம் தேதி இரவு 11.45 மணிக்கு ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அருளாணைப்படி "மேன்மை கொள் சைவ நீதி விளங்குக உலகமெல்லாம்" என்றபடி

திருஞானசம்பந்தர் அருளிய கோளறு பதிகம் 11 பாடல்களைக் குருமூர்த்தி களின் அருளாணைப்படி ஓதுவாமூர்த்திகள் பாடினார்கள். இப்பாடலில் கடைசி அடியான "அடியார்கள் வானில் அரசாள்வார் ஆணை நமதே" என்று பாடி முடித்ததும்

மவுண்ட் பேட்டனிடம் ரிஷபம் வைத்த தங்கச் செங்கோலை சடைச்சாமி கொடுத்து வாங்கி அதன் மீது புனித நீர் தெளித்து, இறைவனின் திருப்பெயரை உச்சரித்து ஆட்சிப் பொறுப்பினை ஏற்க உள்ள பண்டிட் ஜவகர்லால் நேருவிடம் கொடுத்தருளினார்கள்.

அப்போது டி.என்.ராஜரத்தினம் பிள்ளையின் நாதஸ்வரம் முழங்க நேருவிற்கு ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள் திருநீற்றுப் பிரசாதமும் சந்தனமாலையும் அணிவிக்கப்பட்டது.

**திருவாய் மலருதல்:**

செங்கோலை அளித்த தம்பிரான் சுவாமிகள் - தங்கச் செங்கோல் தங்கள் செங்கோல், தங்கள் செங்கோல் எங்கள் ஆட்சியின் சின்னம் எனக் கூறுகையில் ஓதுவாமூர்த்திகள் "அரசாள்வர் ஆணை நமதே" என்ற தெய்வீக வரியினை மீண்டும் உறக்க கூறினார்கள்.

தற்போது இந்தச் செங்கோல் டெல்லி செங்கோட்டையில் உள்ள பரிசுப் பொருட்கள் இருக்கும் கண்காட்சி பகுதியில் - திருவாவடுதுறை ஆதீனத்தின் மேலான சிறப்பினை பறைசாற்றிக் கொண்டிருக்கிறது.



**06.09.1989** அன்று ஆதீனத்துத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
ஆதீன அருட்பிரசாதங்களை அன்றைய
இந்திய குடியரசுத் தலைவர். திருமிகு. **ஆர்.வெங்கட்ராமன்**
தம்பதியரிடம் வழங்குதல்

உ
சிவமயம்

# சுதந்திரத் திருநாள்

## 1. பாரத தேசத்தின் பண்டைக்கால நிலை

வடக்கே இமயமலையும், தெற்கே கன்னியாகுமரியும், கிழக்கும் மேற்கும் கடல்களும் எல்லையாகவுடைய நமது தேசம் பண்டைக் காலத்தில் பாரத தேசம் என்னும் பெயரால் வழங்கலாயிற்று. இந்துஸ்தானம் என்று கூறப்படும் வடநாட்டில் புனித கங்கையோடு சிந்து, நர்மதை முதலிய நதிகளும், தக்ஷிணம் என்று கூறப்படும் தென்னாட்டில் கோதாவரி, காவிரி, வைகை, தாமிரபரணி முதலிய நதிகளும் என்றும் வற்றா நீர்வளத்தைத் தந்து மாந்தர்க்கு ஜீவநாடியாய் விளங்கின. நீர் வளத்திற் குறைவின்மையால் மக்கட்கு வேண்டும் உணவுப்பொருட்கான பிரதேசங்கள் செழிப்புற்று நவதான்யங்களையும் குறைவின்றி நல்கின, தேனடையிலுள்ள, சிறு கண்ணறைகள்போல் கிராமங்கள் தமக்கு வேண்டும் பொருள்களைத் தாமே விளைவித்து, நம் பாரத தேசத்திற்கு ஏற்றம் தரும் நிலைமையில் விளங்கின.

கிராம மக்கள் ஒழுக்கம், அறிவு முதலியவற்றில் மேலானவர்களாக விளங்கியதோடல்லாமல் பிறவி எடுத்ததற்குப் பெரும்பேறான தெய்வ பக்தியிலும் தலை சிறந்தவர்களாக விளங்கினர். உடலுக்கு, இருதய ஸ்தானம்போல் ஊருக்கு நடுவில் ஆலயத்தை அமைத்தனர். ஆலயம் தெய்வ வழிபாட்டுடன் கலை, நீதி முதலியவற்றிற்கு இருப்பிடமாயிருந்தது அன்றித் திருவிழா, தேரோட்டம் முதலிய காரியங்களில் கிராம மக்கள் ஒன்றுபடுவதன் மூலம் சமுதாய ஒற்றுமைக்கும் நிலைக்களமாக இருந்தது.

இத்தகைய சிறப்புகளுக்குக் காரணர்களான நம் முன்னோர்கள் ஆட்சி முறை சிறப்பாக நடைபெறத் தம்முள் ஒரு தலைவனை அமைத்தனர். அத்தலைவன் அரசன் என்ற பெயரில் மக்களுக்கு நீதி செலுத்தி ஆட்சி புரிந்தான். ஆயினும் அரசாட்சியிலுள்ள நிர்வாகப் பொறுப்பைக் கிராம சமுதாயத்தினரே நடத்தி வந்தனர். அக்காலத்து மக்கள் தெய்வ வழிபாட்டு விஷயத்தில் சமய சுதந்திரத்துடன் வாழ்ந்து வந்தனர்.

## 2. இடைக்கால நிலைமை

சகல வளப்பமும் பெற்று நிறைந்த நமது பாரத தேசம் இடைக்காலத்தில் வெளிநாட்டினர் சிலருடைய படையெடுப்புகளுக்கு இலக்காயிற்று. அலெக்ஸாண்டர், கஜினி முகம்மது முதலியவர்களது படையெடுப்புக்குப் பின் பாபர் வருகையின் மூலம் சில காலம் இஸ்லாமியர் ஆட்சி நடைபெற்று வந்தது. பாபரின் பேரரான அக்பர் நேர்மையான முறையில் ஆட்சிபுரிந்து, நம்மவர்களுக்கும் இஸ்லாமியர்களுக்கும் ஒற்றுமைப்படக் காரணமானார். இந்த வம்சத்தில் இறுதியாக வந்த ஔரங்கசீப் மதப்பற்று மிகுந்து செய்த சில காரியங்களால் மனந்தளர்ந்த மக்களுக்கு, மகாராஷ்டிரத்தில் தோன்றிய பெருவீரரான சிவாஜி தலைமை தாங்கி ஜயபேரிகை முழக்கி வந்தார்.

இந்த நிகழ்ச்சியின் முடிவில் ஆறாயிரம் மைலுக்கு அப்பாலிருந்து வியாபார நிமித்தமாக ஆங்கிலேயர் வந்தனர். நாட்டில் அப்பொழுதிருந்த மன்னர்களின் ஒற்றுமைக் குறைவைப் பயன்படுத்திக்கொண்டு, சில சூழ்ச்சிகள் மூலம் அவர்கள் நமது நாட்டினைச் சிறிது சிறிதாகப் பிடித்து இறுதியில் நாடு முழுவதையும் தம் வசமாக்கினர். அவர்களது ஆட்சி முறை கிழக்கிந்தியக் கம்பெனியின் வசம் சிறிதுகாலம் இருந்தது. அந்த ஆட்சிமுறையில் சில விபரீதங்கள் நேர்ந்தமையால் சுதந்திர வீரர்கள் சிலர் தோன்றினர். அப்போது, இங்கிலாந்து அரசியான விக்டோரியா நமது தேச ஆட்சிப்பொறுப்பை ஏற்றுச் சில உறுதி மொழிகளைச் சாசனமாக அளித்தாள். மக்கள் கொஞ்சம் ஆறுதல் அடைந்தார்கள்.

விக்டோரியா மகாராணியின் சாசனத்திற் கண்ட சில முக்கிய விஷயங்கள் நடைபெறாமற்போகவே, தேசத்தின் நிலைமையைத் தெளிவாக்க வேண்டுமென்ற முறையில் சுரேந்திரநாத பனர்ஜி, தாதாபாய் நௌரோஜி முதலிய மகா புருஷர்கள் காங்கிரஸ் மகா சபையை 62 ஆண்டுகளுக்கு முன் தோற்றுவித்தனர். இந்தக் காங்கிரஸ் மகா சபையின் தொடக்கத்திற்கு மூல பிதா ஹ்யூம் என்ற ஆங்கிலேயராவார். ஆண்டுக்கு ஒருமுறை இந்தச்சபை ஓரிடத்திற் கூடி நாட்டின் நிலைமையை அரசாங்கததிற்குத் தெளிவுபடுத்தி வந்தது. அவ்விதம் தெளிவு படுத்தியும் தேசத்திற்குப் பெரும் பயன் விளையாமையால், லோகமாந்ய - பாலகங்காதர திலகர் நாளில் காங்கிரஸ் மகா சபை தீவிரவாதக்

கொள்கையை மேற்கொண்டது. பின்னர்த் தென்னாப்பிரிக்காவில் போராடி ஓரளவு வெற்றிகண்ட புருஷ சிரேஷ்டர் மகாத்மா காந்தியடிகளின் தலைமையில் இந்தச் சபை வந்து நின்றது.

### 3. பாரதத் தாயின் எழுச்சி

மகாத்மாஜியின் தலைமையில் ஒத்துழையாமை, சட்ட மறுப்பு முதலிய புரட்சிகரமான காரியங்களைச் செய்து பாரத சமுதாயம் வீரர்களாக விளங்கி, அஹிம்சையைக் கைவிடாது உறுதியாகப் பற்றிப் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்தது வந்தது. காந்திஜி காங்கிரசில் பிரவேசித்ததும் நாடு பல வீர ரத்தினங்களைக் கண்டெடுத்தது. மோதிலால் நேரு, தேசபந்து தாஸ், படேல், ஜவஹர்லால் நேரு, ராஜேந்திரர், ராஜாஜி, ஆசாத் முதலிய கர்மவீரர்களைக் காங்கிரஸ் மகா சபை தன் சேவைக்கு உட்படுத்தியது. ஒத்துழையாமை இயக்கத்திற்குப் பின்பு வீரமக்கள் பலரைப் பெற்ற பாரதமாதா

ஐயமுண்டு பயமில்லை மனமே – இந்த
ஜன்மத்தில் விடுதலையுண்டு நிலையுண்டு

என்று மனத்துணிவு கொண்டு ஆறுதலுற்றனள் ஒத்துழையாமை இயக்கத்திற்குப் பின் நடந்த சட்ட மறுப்பியக்கமே பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைக் கலங்கும்படி செய்தது. இந்த இரண்டு இயக்கங்களுக்குப் பின்பு நாட்டில் நடந்த தேர்தலில் காங்கிரஸ் கலந்துகொண்டு பல மாகாணங்களில் மகத்தான வெற்றியைப் பெற்றதும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் அப்பொழுது இருந்த சந்தர்ப்பம் காரணமாக ஆட்சிப் பொறுப்பை மாகாணங்களுக்கு விட்டது. அப்பொழுது காங்கிரஸ் அகிலஇந்தியாவில் பெரும் பகுதியைத் தன் கொடிக்கீழ் நிறுத்தியது.

### 4. உலகச் சூழ்நிலை

காங்கிரஸ் மகா சபை பல மாகாணங்களில் ஆட்சிப் பொறுப்பேற்றது 1937 ஆம் ஆண்டு ஜுலை மாதமாகும். இரண்டாண்டுகள் திறமையாக நிர்வாகம் நடத்திவந்த காங்கிரஸ், மாகாண ஆட்சியில் மயங்கிவிடாமல் தனது பூர்ண சுதந்திர லட்சியத்தை வற்புறுத்தி வந்தது. இந்த லட்சியத்தை அதிகம் வற்புறுத்த 1939 – ஆம் ஆண்டு தோன்றிய இரண்டாவது உலகமகா யுத்தம் காரணமாயிருந்தது. ஜெர்மன் தலைவர் ஹெர்ஹிட்லர் போலந்து தேசத்தை ஆக்கிரமிக்கவே பிரிட்டன் போலந்துக்குக் கொடுத்த வாக்குப்படி ஜெர்மனி மீது யுத்தம் தொடுத்தது. உடன் பிரான்சும் பிரிட்டனுடன் சேர்ந்துகொண்டது. யுத்தத்தில் இறங்கிய பிரிட்டன் இந்தியாவை கலந்து கொள்ளாமலே இந்தியாவை யுத்தத்தில் மாட்டிவிட்டது.

இந்தச் சந்தர்பத்தைக் காங்கிரஸ் நன்கு பயன்படுத்திக்கொண்டது. பாஸிஸமும் நாஸிஸமும் ஒழியக் கனவு கண்ட ஜவஹர் பிரிட்டன் போர் தொடுத்ததை ஆதரித்தாலும், இதற்கு மூல வித்தான ஏகாதிபத்தியத்தியமும், ஒழியவேண்டுமென்று துவஜங்கட்டிக் கொண்டவரானதால் இந்தியாவுக்கும் இச்சந்தர்பத்தில் சுதந்திரம் உண்டா என்று பிரிட்டனைக் கேட்டார். இதற்குப் பிரிட்டன் செம்மையான முறையில் பதில்சொல்லாமல் வழ வழ கொழ கொழ என அறிக்கைகள் விட்டது. அந்த அறிக்கைகளில் வெறுப்புற்ற காங்கிரஸ் ஆட்சிப் பொறுப்பை விடுத்தது. சிலமாதங்களில் காந்திஜியின் தலைமையில் நடைபெற்ற தனிப்பட்டவர் - சத்தியாக்கிரகத்தில் தலைவர்களும், ஆட்சிப் பொறுப்பை நடத்தி யவர்களும் கலந்து கொண்டு சிறை சென்றனர். இக்காலத்தில் ஹிட்லர் ஐரோப்பாவின் பெரும் பகுதியை ஜெயித்துப் பிரிட்டனுக்கு ஓயாத தொல்லையை விளைவித்ததோடல்லாமல், ரஷ்யா மீதும் போர் தொடுத்தார். ஜெர்மன் - ரஷ்ய யுத்தத்தில் உலகம் ஒரு மாறுதல் அடைந்தது. சந்தர்ப்பம் காரணமாகக் காங்கிரஸ் தலைவர்கள் விடுதலையாயினர்.

சில மாதங்களுக்குப் பின், வெள்ளையனே வெளியே போ என்ற இயக்கத் தீர்மானத்தால் தலைவர்கள் மீண்டும் 1942 - ஆண்டு சிறைப்பட்டனர். முப்பத்து மூன்று மாதங்களுக்குப் பின்னர் உலகநிலை காரணமாக அவர்கள் விடுதலை பெற்றனர். அப்பொழுது வைஸ்ராயா யிருந்த லார்ட்வேவல் கூட்டிய மகா நாடு பலனடையாமற் போனாலும், பிரிட்டிஷ் அரசியலில் ஒருமாறுதலை உண்டாக்கிற்று. இந்தியாவின்பால் நல்லெண்ணங்கொண்ட தொழிற் கட்சியார் பிரிட்டன் ஆட்சிப் பொறுப்பை ஏற்றனர். ஆட்சிப் பொறுப்பேற்ற சில மாதங்களில் அவர்கள் பொறுப்பு வாய்ந்த தலைவர்கள் சிலரை இந்தியாவுக்கு தூதனுப்பினர். தூதர்களும், தலைவர்களும் கலந்து பேசினர். தலைவர்களுக்குள் ஒற்றுமையில்லை என்ற காரணத்தால் தாமே ஒரு தீர்ப்பை அவர்கள் வெளியிட்டார்கள். இந்தத் தீர்ப்பும் பலனளியாமற் போகவே, தூதர்கள் லண்டன் மீண்ட சில மாதங்களில் இந்தியாவில் நேருஜியின் தலைமையில் இடைக்கால அரசாங்கம் ஏற்படுத்தினர். தூதினர் வகுத்த திட்டப்படி நடந்த அரசியல் நிர்ணய சபை தேர்தலை அமுலாக்கினர். ஆரம்பத்தில் இடைக்கால அரசாங்கத்தில்

கலந்துகொள்ளாத முஸ்லீம் லீக் ஒரு மாதத்திற்குப் பின் சேர்ந்தது. காங்கிரஸ் - லீக் கூட்டு ஆட்சி நடைபெற்று வந்தது.

## 5. சுதந்திரத் திருநாள்

இதற்கிடையே வைஸ்ராய் வேவலைப் பிரிட்டிஷார் வாபஸ் பெற்று, லார்ட் மௌண்ட்பேட்டனை ராஜப் பிரதிநிதியாக்கி விரிவான அதிகாரத்துடன் அனுப்பி, இந்தியாவிலிருந்து பதினாறு மாதங்களுக்குள் (1948 ஜுலைக்குள்) தாம் வாபஸ் ஆவதாகவும் அறிவித்தனர். இந்தக் காலத்தை லார்ட் மௌண்ட்பேட்டன் 1947 ஆகஸ்டு 15 ந் தேதியாக மாற்றி, முஸ்லீம் பெரும்பான்மையான பகுதிகளில் சிலவற்றை பாகிஸ்தான் வேண்டுமென்றவர்களுக்கு அளித்து, இந்தியாவை இருபிரிவாக்கி இரண்டு டொமினியன்கள் ஆக்கினர். இந்த இரண்டு டொமினியன் களையும் பார்லிமெண்டும் மன்னரும் அங்கீகரிக்கவே. இவை சட்டபூர்வமான இரு அரசாங்கமாக மாறிவிட்டன. இந்த இரண்டு அரசாங்கத்தினிடமும் பூர்ண அதிகாரம் நாளது 1947 - ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 14, 15 தேதிகளில் மாறுகிறது. நூற்றைம்பது வருஷ காலமாக இந்தியாவை பிடித்து வந்த பிரிட்டிஷ் ஆட்சி நாளது ஆகஸ்டு மாதம் 15 தேதிக்குள் முடிகிறது. அன்றே பூர்ண சுதந்திரம் வந்தடைகிறது. இந்த நாளை நமது பாரத மக்கள் சுதந்திர விழாவாகக் கொண்டாடுகின்றனர்.

போராட்டக் காலத்தில் பிரிடிஷ் ஆட்சி எத்தனையோ இடுக்கண்களைப் புரிந்து வந்தாலும் முடிவில் தலைவர்கள் வாகை சூடிவிட்டனர்.

நந்தம் பெருமைக் களவாகிய சார்பி னிற்கும்
எந்தம் பெருமக் களையாவர் தடுக்க வல்லார்?

திலகரின் சங்கநாதத்தில் கண்விழித்து, காந்திஜியின் தலைமையின் சோம்பரைத் துடைத்து நேருஜி, வல்லபாய், ராஜேந்திரர், ஆஸாத் முதலிய தலைவர்களின் முழக்கத்தையும் செயலின் திறமையாலும் போராடிய காங்கிரஸ் மகாசபை இன்று சுதந்திர வாயிலை அடைந்தது. பிரிட்டிஷ் தொழிற் கட்சியினர் நீண்ட நாளாகத் தாங்கள் சொல்லி வந்ததைச் செயலில் காட்டியதாலே தான். இதனோடு லார்ட் மௌண்ட்பேட்டனது நேர்மைக்குணமும் சேர்ந்துகொண்டது. கனவிலும் எதிர்பாராத இந்த மகத்தான சுதந்திர விரைவு பாரதமக்களை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்திவிட்டது. பாரததேசம் ஆகஸ்ட் 15 தேதியைக் குதூகலத்துடன் விழா நாளாகக் கொண்டாடப் போகிறது.

பாரத மக்களாகிய நாம் இந்திய சுதந்திர விழாவைக் கொண்டாடுங் காலத்தில் நமது முன்னோர்கள் தங்கள் மகிழ்ச்சிக்குரிய காலங்களிற் கொண்டாடிய விழா வைபவத்தில் ஒன்றை இங்கே குறிப்பிடுவது பொருத்தமானதாகும். நமது நாட்டுக்கு ஜீவநாடி சமயமே என்றார் விவேகானந்தர். சைவ சமயத் தலைவர்களில் ஒருவரான **திருநாவுக்கரசு சுவாமிகள்** குணபர பல்லவனால் நேர்ந்த இடுக்கண்களைக் கடந்து திருவதிகை அடைந்த காலத்தில் சமய சுதந்திர விழாவைத் திருவதிகையில் எங்கும் தோரணம் கட்டி வாழை, குமுகு முதலியன நாட்டி, கோபுரம் தெற்றி முதலிய இடங்களில் பூமாலைகள் தொங்கவிட்டு நகரத்தை அலங்கரித்து எல்லா இடங்களிலும் இயல் நாதமும் ஏழிசை யோசையும், விம்மச் சுண்ணமும் பூவும் பொரியும் தூவி ஆடவரும் பெண்டிரும் அவரை எதிர்கொண்டார்கள் என்று சேக்கிழார் சுவாமிகள் கூறியருள்கின்றார்கள்.

நாமும் சுதந்திர பாரத தேவியை நாளது ஆகஸ்டு மாதம் 15 ஆம் தேதி அவ்வித வைபவத்துடன் வரவேற்றுக் கொண்டாடி மகிழ்ந்து செல்வம், கலை, வீரம், ஒற்றுமை, தியாகம், சமயஞானம் முதலியவற்றில் விசேஷப் பயிற்சி பெற்று விளங்குவோமாக.

வாழ்க நங்கள் வளந்திகழ் பாரதம்
வாழ்க அங்கண்வாழ் மக்கள் அனைவரும்
வாழ்க எங்கணும் மாசில் அறநெறி
வாழ்க வாழ்கஇவ் வையக முற்றுமே.



15.08.1947 – அன்று
**மேதகு. ஜவஹர்லால் நேரு** அவர்களிடம்
ஆதீன அருட்பிரசாதமாகத்
**தங்கச் செங்கோல்** சேர்ப்பித்தல்



திருவாவடுதுறை ஆதீனம்
பாரதப் பிரதமர் **மேதகு.ஜவகர்லால் நேரு**
அவர்களுக்கு வழங்கிய **தங்கச் செங்கோல்**

# SCEPTRE TO BE PRESENTED TO NEHRU

MADRAS, Aug. 10.

In connection with the Independence Day celebration, His Holiness Sri-la-Sri Ambalavana Pandarasannadhi of Tiruvaduthurai has arranged to perform special puja to Shiva and to confer the Lord's blessings on Pandit Jawaharlal Nehru. The puja prasadams and a sceptre made of gold will be presented to Pandit Nehru at his residence in New Delhi at 11 p.m., on August 14. The gold sceptre was made by Vummidi Bangaru Chetti and Sons, Jewellers and Diamond merchants of the City.

The Hindu/11-08-1947/6

11.08.1947 அன்று வெளிவந்த

**தி இந்து**

ஆங்கில நாளிதழ் செய்தி



Indian Express

MADRAS: WEDNESDAY, AUGUST 13, 1947.

Paraguayan Govt. Flee Capital

DISSOLUTION OF CONGRESS WILL LEAD TO CHAOS

Indian Dominion Cabinet

SWAMI RAMANAND TIRTH TAKEN INTO CUSTODY

HIGH COMMISSIONER FOR PAKISTAN

# GOLDEN SCEPTRE FOR PANDIT NEHRU

## Presentation by Head Of Thiruvaduthurai Mutt

MAYAVARAM, Aug. 11.

It is officially announced that His Holiness Sri La Sri Ambalavana Desika Swamigal, the Mahasannidanam of the Thiruvaduthurai Adinam, Tanjore District has decided to present Pandit Jawaharlal Nehru, the first Prime Minister to the Indian Dominion with a Golden Sceptre studded with jewels and worth about Rs. 15,000 and that Pandit Jawaharlal Nehru has accepted to receive the present of His Holiness at exactly 11-5 p.m. on Aug. 14.

To represent His Holiness at the function Sri-la-Sri Kumaraswami Thambiran of Thiruvathigai and Mr. R. Ramalingam Pillai, Dakshinam Superintendent left for New Delhi yesterday.

The Golden Sceptre will be taken to the Constituent Assembly Hall in procession to the accompaniment of the Nathaswaram of Mr. T. N. Rajaratnam Pillai the Adinam Vidwan.—F.O.C.

13.08.1947 அன்று வெளிவந்த

**இந்தியன் எக்ஸ்பிரஸ்**

ஆங்கில நாளிதழ் செய்தி

# THIRUVAVADUTHURAI ADHEENAM

**By A DISCIPLE**

On this august occasion it is my earnest desire that the public should be made aware of something about our mutt.

One of the remarkable achievements of the present incumbent of the Thiruvavaduthurai Adheenam, (the 20th Guru-maha Sannidhanam) Sri-la-Sri Ambala- [illegible]



*His Holiness Sri-la-Sri Ambalavana Desika Paramacharya Swamigal of Thiruvavaduthurai Adheenam, the Twentieth Guru Maha Sannidhanam.*

is the discharge of the debt of about Rupees eleven lakhs left to accrue during the period of his four predecessors in office. Two villages which had been mortgaged for Rupees one lakh sixty years ago were redeemed by His Holiness last May. Large donations and munificent gifts have been made for the propagation and development of educational institutions, fine arts, and crafts, in addition to the usual Maheswara Poojas and poor feedings. All these are being done on an ever expanding scale though the incomes are fixed or contracting. Much of the usual wasteful expenditures on litigation have been avoided and claims settled out of court to the satisfaction of all concerned.

His Holiness has caused the renovation and reconditioning of the long-neglected buildings of the Adheena Mutt, the Pooja Mutt of the Sri Namasivaya Murti Sannadhi, Kolu Mantapam, the small pooja mutt, the Dinner Hall (Pandhi Kattu, repairs to which had not been effected for the last 60 or 70 years). He is devoting attention to the rare manuscripts on Saiva Siddhantha, kept in the Saraswathimahal Library attached to the Mutt, steps have been taken to print [illegible]

has it that this shrine owes its origin to Saint Thirumaligai Thevar who was favoured and blessed by his Guru, Bogha Nathar at this place. This place is also known as 'Navakoti Sittavadapuram' on account of the legend that nine crores of Siddhars have lived and flourished here. Above all it was at this shrine the famous Saint Gnanasambandar prayed for and was favoured with one thousand gold coins to help his father to perform yagas.

The great Sage who had the grace to found a Saiva Mutt in this place was Sri Namasivaya Murthigal. The learned and lovely Nandi approached his Master on Mount Kailas, the great Parameswara and submitted to him as follows: "Oh, my Lord and Master, I find in the Saiva Agamas given by you that the eternal verities (Nitya-Patharthams) are variously enumerated as seven, six, five, four and three. I am unable to know what exactly is the number. May I pray to you in all humility to clarify the truth to me?" "Right was your request" exclaimed the Lord with pleasure and said "There is a chapter on 'Sivagnanabodham' in Rourava Agama wherein alone is contained an exact and correct explanation of all the other Saiva Agamas. Let us now explain and impart it to you," so saying Lord Siva initiated Nandi into that mysterious teaching of Sivagnanabodham; the latter who learnt it was mightily pleased, for now all his doubts had been cleared. Then he taught these truths to Sanatkumara, the best among his pupils. He in his turn taught them to Satyagnanadarsini who in his turn gave them to Paranjothi Munivar. Hence, these four Gurus from Nandi downwards are known as Aha-Santhanathars; (inner circle of Santhanacharyas) and Deva-santhanathar. There was one Achuthakalappalar in the town of Pennagadam in the Nadu-nadu. Being childless for a long time, he expressed his grievance to his Guru Arulnandi Sivacharyar. The latter, in order to know God's will, as was the custom then, and as is so even now in some families, opened the Thevara Hymns at random by means of inserting a thread. The stanza that was opened was the one in the Thiruvenkadu Thirupathigam. As directed by that stanza Achuthakalappalar and his spouse took themselves to Thiruvenkadu and scrupulously spent their time in having daily ablutions in the three holy tanks and performing the worship of Swetavaneswara and His spouse. God Siva answered his servant's prayer and the wife of Achuthakalappalar soon gave birth to a superb little male child. This dearest gift of the Lord was duly christened after the Lord of that Temple, i.e., Swethavanaperumal and the proud parents returned with their babe to their own native place. After thus they had reached home, one Kangeya Bhupathy, the boy child's maternal uncle, paid them a visit from Thiruvennainallur. Amazed at the child and attracted by its [illegible]

by him, he learnt from the latter all the works on Saiva Siddhantam so far composed by his Guru and his predecessors alike. He also was living at Kotravangudi.

Sivaprakasar, a Siddhar, who was living variously at both Vedaranyam and Thiruvavaduthurai became a disciple of Arulnamasivayar and after being initiated he was taught all the works from Sivagnanabotham downwards and was in *nishtai* at Chidambaram.

After sometime the said Sivaprakasar was once going from Chidambaram to Thiruvavaduthurai. On his way at Muvalur, he came across one Vaidyanathar, a member of the Vellala community, who, on account of his supreme luck prostrated at the former's feet and begged to be taught the Truth. Siddhar Sivaprakasar, seeing the ripeness of his soul to receive the eternal truth, duly initiated Vaidynathar, christened him after his own Guru as "Namasivayan" and taught him all the Siddhantic works usually taught in his "parampara". And this Namasivayar lived in the room at Thiruvavaduthurai, as ordained by his Siddha Guru Sivaprakasar and duly founded the Adhinam to perpetuate and preach the Sivagnanabodha Saiva Siddhantam in a lineal succession in the world. The truth of the origin of this parampara is found in a stanza by Dakshinamurthi Desikar.

**SRI NAMASIVAYA MURTHI'S TIME**

The time when Sri Umapathi Sivachariyar wrote his "Sankarpa Niraharanam" is said to be 1235 in "Salivahana Sahaptam" in that work itself. Since the Salivahana Sahaptam year now is 1869, it is to be calculated that Sri Umapathi Sivacharyar lived about 600 years ago. From the words of Meignana Munivar in his "Thiruvizhimizhalai Puranam" we learn that he lived three hundred years ago. And he was the pupil of Sri Maraignana Desikar who had himself been the pupil of Namasivaya Desikar. Hence it may be stated that Sri Namasivayar's age must be placed in between these two limits. The tradition that Sivagira Yogigal who had founded the Suryanarkovil Adhinam of "Skanda Parambarai" had gone over to Thiruvavaduthurai and spent some pleasant time with this Namasivaya Thambiran may help us to decide his time in so far as we know that the former is understood to have lived during the time of the Tanjore Kings.

**LATER ACHARYAS**

After Sri Namasivaya Murthi, Sri Maraignana Sambandar and after him, Sri Ambalavana Desikar, had been conducting the Adhinam as its successive Heads. Among them, Sri Ambalavana Desikar wrote "Dasa Karyam", "Sanmarga Siddhiar", "Sivacharana Thelivu", "Siddhanta Pahithodai", "Siddhanta Sigamani", "Upaya Nittai Venba", "Nittai Vilakkam", "Upadesa Venba", "Namasivaya Malai", "Pashanda Niraharanam", etc. During the reign of the fourth Head in the suc-

26.01.1950 அன்று வெளிவந்த
தி இந்து ஆங்கில நாளிதழ் செய்தி



*Photo showing Dr. Rajendra Prasad who had come to Thiruvavaduthurai Adheenam to receive donation to Gandhi Memorial Fund in pleasant conversation with His Holiness Sri-la-Sri Ambalavana Pandarasannadhi Swamigal Avergal, Head of the Adheenam, on 30-4-1949.*

lished yet. **The Dravida Maha Bashya of the Sivagnana Bodha Maha Bashya will be shortly published by His Holiness as a Mutt publication.**

A propaganda van has been purchased by the Mutt for Rs. 18,000 for religious propaganda. The Tambiran Swamies and others are being given discourses in the sacred literatures. In the traditional style the Adheena Vidwan, Sri Meenakshisundaram Pillai Avl., is imparting knowledge and edification in the premises of the Mutt.

The High School at Tiruvidaimarutheoi is being run by the Mutt efficiently and under the personal supervision of His Holiness. His munificent donation of Rs. 35,000 to the Gandhi Memorial Fund, when Dr. Rajendra Prasad was here is well known. His Holiness has graciously given Rs. 50,000 to the Patriot V. O. Chidambaram Pillai's Memorial College at Tuticorin. He has taken over the administration of the Tanjore Karanthai Tamil Sangam College and other educational institutions involving an expenditure of about a lakh of Rupees annually. To serve the needs of the suffering public he is maintaining a free Ayurvedic Dispensary at Thiruvavaduthurai. A sum of Rs. 1,001 has been donated by His Holiness to the South India Journalistic Federation Building Fund, Madras as a first instalment. Kasturi and Gorochana Pills are supplied free to women in confinement. Continuous and munificent is the help rendered by His Holiness to all worthy causes, whether sponsored by Government or local bodies, to individuals as also to institutions. Far-sighted and abreast of the times His Holiness spread the message of Gandhiji when he arranged for the ashes of Gandhiji to be taken to Tiruvavaduthurai and took them out in procession. The whole of the Madras

took away the child himself and brought him up as his own. The wonderful boy—the gift of Lord Siva—was fast growing in his uncle's home. In the meanwhile, the last of the four Aha-santhanathar Paranjothi Munivar was one day on a airy way to Agasthia Munivar on the Pothigai Hills. When he was passing over Thiruvennainallur, the Sage spied this superb child of two years—Swetavanaperumal at play in the streets of the place. First he was charmed by the singular beauty of the child and then he found out that the child's was a rare soul of ripeness ready for beatitude. Hence he took the child aside and initiated and fitted him with Sivadeeksha, named him Meikandar in memory of his own Guru and taught and instructed him the sacred Sivagnanabotham he had himself received before.

This Child-Saint of Thiruvennainallur, so rich with the benediction of a sublime Sage and saturated with the philosophy of Agamantam, thought about these truths and got them perfectly crystallised. Then he set about translating into sententious abstruse Tamil his Sivagnanabotham in the shape of twelve Sutras, to which of course he added what is called Varthika Commentary. On hearing of this, Arulnandi Sivacharya of Thiruthuraiyur reached Thiruvennainallur and falling at the feet of this divine prodigy prayed for being accepted as his pupil and initiated into the truths. Meikandar, the child-Guru gave Deeksha to this man-pupil who was also his main pupil and taught him the truths as contained in his Sivagnanabotham. Then he ordered his learned pupil to compose a treatise in Tamil poetry as an explanatory and commentary on his original Sivagnanabotham. Accordingly were composed by Arulnandi, "Sivagnana Siddhiar" and "Irupa Irupahthu".

cession, namely Sri Rudrakodi Desikar, the then Madura Naik, Sevvandiappa Naiker in appreciation of the Desikar's greatness and the spiritual greatness of one Isana Thambiran built for that Adhinam splendid Mutts in eight places like Papavinasam, Thiruppudai Marudur, Tirunelvely, Valliyur, etc., and also endowed the necessary number of villages for their upkeep.

It was from that time onwards that the Adhinam began to receive huge incomes. Thus, the time when the Naik King endowed the properties to the Adhinam was between 1537 to 1543 of Salivahana Sahaptam. Then came Sri Velappa Desikar, fifth in succession, and then two successors of the same name Sri Kumaraswamy Desikar (sixth and seventh Heads). Then came Sri Masilamani Desikar (eighth). Sri Swaminatha Desikar, who had studied under the said Masilamani Desikar, wrote five excellent works in Tamil such as "Kadampavana Puranam", "Thiruchendur Kalambakam", "Ilakkana Kothu", "Sivagnanabodha Sobrana Kothu" and "Dasa Karyam".

His pupil Namasivaya Pulavar of Tirunelvely wrote a new commentary on "Nannool" (a work on Tamil grammar). The above said Masilamani Desikar is also said to have converted the brackish water in a well at Thiruvengadu into pure drinking water by way of illustrating the efficacy of Maheswara Puja (worship of Siva Bakthas) at the instance of the then ruling Raja of Tanjore.

The ninth in succession was Sri Ramalinga Desikar and the tenth in succession was Sri Velappa Desikar. It was during the period of this Sri Velappa Desikar that the famous and ingenious Sri Madhava Sivagnana Yogigal flourished. He had been the pupil of Sri Porur Velappa Swamigal who was then the heir apparent to the Holy See (Chinnapattam) and who was presiding over the Mutt at Suchindram; Sivagnana Yogigal had also been initiated and given the robes of a Sanyasin by the latter. And this Sivagnana Yogigal was the reputed author of such rare and brilliant works like "Mahabashyam" in Tamil, i.e., a learned commentary on Sivagnanabodham, a minor commentary on the same, a paraphrase of Sivagnana Siddhiar, the first canto of Kanchi Puranam, Tholkapia Sutra Viruthi and Sivathathuva Vivekam. He had also the unique honour of teaching Tamil and Saiva Siddhantam to such brilliant pupil as Kachiappa Munivar. He bears an honoured name also as the Dravida Maha Bashyakarar since he fulfilled the need of a Bashyam in Tamil. Sivagnana Yogigal's services have been largely responsible for what larger popularity Saiva Siddhantam has in Tamil-Nad to-day.

Sri Velappa Desikar who was the eleventh Head in the succession was the author of Pariyalur Puranam. And his pupil by name Sastram Sri Swaminatha Thambiran wrote the Thiruvavaduthurai Puranam. Sri Thiruchitrambala Desikar, the twelfth Head of this Adhinam, while he was returning from his pilgrimage to Rameswaram, halted on the way at Ramnad. On the request of the then Setupathi to do something for the land which was then

26.01.1950 அன்று வெளிவந்த
**தி இந்து** ஆங்கில நாளிதழ் செய்தி

ashes of Gandhiji to be taken to Tiruvavaduthurai and took them out in procession. The whole of the Madras Presidency is beholden to him for this. On the occasion of the Transfer of Power from the British to Indian hands His Holiness sent his blessings with a Sceptre of Gold to be held in the hands of the Prime Minister Pandit Jawaharlal Nehru. Not less remarkable is the administrative efficiency and the vigorous drive which His Holiness displayed in the routine affairs of the Mutt. Indeed it may be claimed without fear of exaggeration that the Mutt's achievements are as remarkable as they are varied. All the needs of the public, lay and spiritual are being attended to and catered for by this Mutt. Can anybody do more? This is a forceful reply to the Madras Government which appears anxious to bring this hoary and useful public institution under Government control on the ground of inefficiency or mismanagement.

### A SHORT HISTORY

Thiruvavaduthurai is one of the holy shrines of Siva, hallowed by the worship and 'works' of the Saiva Nayanmars. It is situate in the Chola Country (Tanjore District), in between Mayavaram and Kumbakonam on the southern bank of Cauveri. The great Mother Umadevi, who had been, according to a popular legend, transfigured into a Pasu (cow) is said to have regained her original form after a worship at this shrine. It was again at this place that the immortal Saint Thirumular lived in Yoga for three thousand years and composed his work of three thousand stanzas on Saivite Mysticism and philosophy. Legend

bothiam. Accordingly were composed by Arulnandi, "Sivagnana Siddhiar" and "Irupa Irupahthu".

One Maraignanasambandar who had been born at Marudur in the gothra of Parasara Munivar, and, who was later on living at Pennagadam, repaired to Arulnandi Sivachariar and was given the initiation first and then was taught all the truths as contained in Sivagnanabotham, Sivagnana Siddhiar and Irupa Irupahthu. After this he was in samadhi in the Sannadhi of Brahmadisar at Thirukkalancheri to the west of Chidambaram.

There was a person by name Umapathi Sivachariar born at Chidambaram among the holy tribe of the Thillai Brahmin Deekshitars. He approached Maraignanasambandar in all humility and being found by the latter fit enough for the Truths, he was duly initiated and then taught all the Tamil works, i.e., Sivagnanabotham, Sivagnanasiddhiar, Irupa Irupahthu, etc. And having thus learnt it all, he for his part contributed his share to the further elucidation of the great Siddhantic mysticism by composing on similar lines in excellent Tamil verses eight brilliant treatises. They are: "Sivaprakasam", "Thiruvarutpayan", "Nenju-vidu Thoothu", "Potri Pahlthodai", Unmai Neri Vilakkam", "Kodikkavi", "Vina Venba" and "Sankarpa Viharanam". He also wrote a commentary in Sanskrit on the Gnanapatham in Poushkara Upanishad, and also some other works.

Arulnamasivayar, another pupil learnt about the greatness of the previously mentioned Guru, Umapathi Sivachariar, who was then at Kotravangudi a little to the east of Chidambaram and after being duly initiated

halted on the way at Ramnad. On the request of the then Setupathi to do something for the land which was then suffering from severe draught due to failure of rains, this great Sivayogin performed the Puja of Sri Gnana Nataraja and went into Yoga Nishta. As a result of his severe *tapas* showers of rain descended from the sky and made the country live and prosper. No wonder then that the Setupathi endowed and gifted many a village in *inam* to the Holy See of Thiruvavaduthurai. It was during his period that the junior See shifted to the Mutt at Kallidaikurichi from Suchindram. Then followed as the Head of the Holy See Sri Ambalavana Desikar as the thirteenth in succession. The fourteenth Head was Sri Subramanya Desikar and the fifteenth Sri Ambalavana Desikar. Similarly, the sixteenth in succession was also a Subramanya Desikar. Among them Sri Subramanya Desikar was responsible for a word for word Notes which closely followed Sivagnana Yogigal's able Paraphrase for Sivagnana Siddhiar. It was during this Subramanya Desikar's reign that the ablest and most erudite of Tamil scholars and poets Sri Sabapathi Navalar and Sri Meenakshi Sundaram Pillai, popularly called the Maha Vidvan were adorning and illuminating the Adhinam as a whole. Then came to the See the Seventeenth in succession. Sri Ambalavana Desikar and the eighteenth in succession Sri Subrahmanya Desigar. Sri Vaidyalinga Desikar was the nineteenth Head of the Adhinam.

And now, the present Head of the Adhinam is His Holiness Sri-la-Sri Ambalavana Desikar who ascended

(Continued on next column)



(Continued from previous column)

the Holy Gadi in November 1937, and who is reigning over the religious dominion with rare splendour and success. During the occasions of the anniversary celebration, of the original founder of the Holy See, the present Head of the Adhinam convokes the assembly of pandits and scholars and promotes learning by liberally giving them presents. Many are the literary works of the Adhinam which under his vigilant supervision get published very often. His discerning services to the public at large are legion.

Saivaism and Tamil are the sacred wards of this Holy Adhinam of Thiruvavaduthurai and may His reign of grace and kindness continue and last for ever and confer beatitude on all.

26.01.1950 அன்று வெளிவந்த
தி இந்து ஆங்கில நாளிதழ் செய்தி



# ஆட்சிமாற்றத்தை அடையாளப்படுத்திய செங்கோல்!

**மவுன்ட்பேட்டனுக்கும் திருவாவடுதுறை ஆதீனத்துக்கும் என்ன தொடர்பு?**

## சொல்ல மறந்த உண்மைக் கதை இது...

**வரலாறு விநோதமானது. சில முக்கியமான சம்பவங்களைச் சர்வசாதாரணமாக விழுங்கிவிடும். 1947-ம் ஆண்டு ஆகஸ்டு 15-ம் தேதி இந்தியாவுக்குச் சுதந்திரம் கிடைத்த சரித்திர நிகழ்வில், தமிழகத்தைச் சேர்ந்த திருவாவடுதுறை ஆதீன மடத்துக்குக் கிடைத்த பெருமையை பலரும் அறிந்திருக்க வாய்ப்பில்லை. அதைத் தெரிந்துகொள்வோம்.**

இந்தியாவின் கடைசி ஆளுநராக இருந்த மவுன்ட் பேட்டன், நேருவை அழைத்து, “இந்தியாவுக்குச் சுதந்திரம் கொடுக்கப்போகிறோம். அதைஎப்படி அடையாளப்படுத்துவது?” என்று கேட்க, குழப்பம் அடைந்த நேரு, உடனடியாகப் பதில் கூறவில்லை. அடுத்து மூதறிஞர் ராஜாஜியை அணுகி, “இதற்கு நீங்கள்தான் தீர்வு சொல்ல வேண்டும்” என்று கேட்டுக்கொண்டாராம். உடனே ராஜாஜி, “கவலை வேண்டாம். தமிழகத்தில் மன்னர்கள் ஆட்சிமாற்றம் செய்யும்போது, ராஜகுருவாக இருப்பவர் செங்கோலைப் புதிய மன்னருக்குக் கொடுத்து ஆசீர்வதிப்பார். அதுபோல நாமும் மகான் ஒருவர் மூலம் செங்கோல் பெற்று ஆட்சிமாற்றம் அடையலாம்” என்று கூறியிருக்கிறார். அப்போது இந்தியாவின் சைவ மடங்களில் ஒன்றான திருவாவடுதுறை ஆதீன மடத்தின் 20-வது குருமகா சந்நிதானமாக இருந்தவர் அம்பலவாண தேசிகர் (1937 - 1951). அவரைத் தொடர்புகொண்ட ராஜாஜி, ஆட்சி மாற்றத்துக்கான சடங்குகளைச் செய்துதரச் சொல்லிக் கேட்டிருக்கிறார்.

அதன்பின் நடந்தவற்றை, 20-வது சந்நிதானத்தின் உதவியாளராக இருந்தவரும் தற்போது துபாய் நாட்டில் மகன் வீட்டில் வசித்துவருபவருமான 94 வயது மாசிலாமணி பிள்ளையை, அவரது மகன் இளங்கோவன் மூலம் தொடர்புகொண்டு கேட்டோம். “ஆதீனம் அந்த நேரத்தில் கடும் காய்ச்சலில் இருந்தார். ஆனாலும், சென்னையில் பிரபலமாக இருந்த உம்மிடி பங்காரு செட்டியார் நகைக் கடையில் சைவச் சின்னம் பொறித்த தங்கத்திலான செங்கோல் ஒன்றைத் தயாரித்துத் தரும்படிக் கேட்டுக்கொண்டார். அதன் எடையும் விலையும் தற்போது எனக்கு நினைவில் இல்லை.



திருவாவடுதுறை ஆதீனம்

ராஜாஜி ஏற்பாடு செய்த தனி விமானத்தில், திருவாவடுதுறை ஆதீன மடத்தின் கட்டளை சாமியாக இருந்த சடைச்சாமி என்றழைக்கப்படும் திருவதிகை குமாரசாமி தம்பிரானையும், மடத்தின் ஓதுவார்களையும் டெல்லிக்கு அனுப்பி வைத்தார்கள். அவர்கள் கூடவே மங்கள இசை முழங்க மடத்து வித்வான் திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளை குழுவினரும் சென்றிருந்தனர்.

1947-ம் ஆண்டு ஆகஸ்ட் 14-ம் தேதி இரவு 11.45 மணிக்கு,



17.04.2019 அன்று **ஜூனியர் விகடன் இதழில்**
வெளிவந்த செய்தி



திருவாவடுதுறை ஆதீனம் கோயில்



செங்கோலுடன் நேரு

செங்கோலுடன் நேரு

தேவாரத்தில் கோளறு பதிகத்திலுள்ள 11 பாடல்களைப் பாடுமாறு குருமகா சந்நிதானம் அருளியிருந்தார். அதன்படி 'வேயுறு தோளிபங்கன்' எனத் தொடங்கும் தேவாரத் திருப்பதிகத்தின் 11-வது பாடலில் கடைசி அடியான 'அடியார்கள் வானில் அரசாள்வர் ஆணை நமதே' என்று பாடி முடிக்கும்போதே மவுண்ட் பேட்டனிடமிருந்து செங்கோலை சடைச்சாமி பெற்று, அதன்மீது புனிதநீர் தெளித்து, இறைநாமம் உச்சரித்து, நேருவிடம் கொடுத்தார். இது தமிழுக்கும் தமிழ்நாட்டுக்கும் பெருமை சேர்த்த விஷயமாகும். நேரு கையில், செங்கோலை சடைச்சாமி தரும் அரிய புகைப்படம் திருவாவடுதுறை ஆதீன மடத்தில் உள்ளதை இன்றும் காணலாம்" என்றார்.



மாசிலாமணி



நாராயணசாமி

திருவாவடுதுறை ஆதீன மடத்தின் நூலகத்தில் நீண்டகாலம் பணியாற்றிய நாராயணசாமியைச் சந்தித்தபோது, "சுதந்திரம் பெறும் நிகழ்ச்சிக்கான மேடை அருகில், ராஜரத்தினம் பிள்ளையின் நாதஸ்வரக் கச்சேரி நடந்திருக்கிறது. அங்கே பெரும்கூட்டம் கூடியிருப்பதைக் கண்ட நேரு, 'யார் அங்கு இருப்பது? ராஜாவா?' என்று கேட்க, 'நாதஸ்வர இசையுலகின் ராஜா' என்று பதில் சொன்னார்களாம். இதனை அந்த நிகழ்ச்சியில், தாளம் வாசித்து ஆறு ஆண்டுகளுக்குமுன் மறைந்த கோவிந்தராசு என்னிடம் சொன்னார். பிரயாக்ராஜ் (அலகாபாத்) நகரில் உள்ள நேருவின் இல்லமான ஆனந்தபவன், அருங்காட்சியகமாக மாற்றப்பட்டிருக்கிறது. ஆதீனம் வழங்கிய செங்கோல், தற்போது அங்குதான் வைக்கப்பட்டுள்ளது" என்றார்.

- மு.இராகவன்

படங்கள்: பா.பிரசன்னா



17.04.2019 அன்று **ஜூனியர் விகடன் இதழில்**
வெளிவந்த செய்தி

12 தினமலர் திருச்சி திங்கள் மே 4, 2020





# சுதந்திரம் பெற்ற நிமிடத்தில் தமிழ் மகுடம் ஏறியது!

ஒரு நாட்டின் மன்னர், மற்றொரு நாட்டு மன்னருடன் போரில் வெற்றி பெறும்போது அதற்கான மகுடத்தை யாரிடம் இருந்து, எப்படி பெற்றுக் கொண்டு சிம்மாசனத்தில் உட்காருவது என்பதற்கான ஒரு மரபு உள்ளது.

அதேபோல், ஜனநாயக நாட்டில் நடக்கும் தேர்தலில் மக்களிடம் ஓட்டு வாங்கி பெரும்பான்மையுடன் வெற்றி பெற்று முதல்வராக, பிரதமராக தேர்வாகி பொறுப்பேற்பவருக்கு முறையே மாநில கவர்னர், ஜனாதிபதி பதவி பிரமாணம் செய்து வைப்பார்கள்.

அதுபோலத்தான் நம்நாட்டின் சுதந்திரத்தையும் பெற வேண்டுமென ஜவஹர்லால் நேரு விரும்பினார். அந்த சமயத்தில், எப்படி சுதந்திரத்தை வாங்கி கொள்கிறீர்கள் என நேருவிடம் மவுன்ட்பேட்டன் பிரபு கேட்டதற்கு "என்னைவிட மூதறிஞர் ராஜாஜிக்குதான் இதில் அனுபவம் அதிகம்" என கூறியுள்ளார்.

"அந்தக் காலத்தில் அரசன், தனது வெற்றியை குலகுருவிடம் இருந்துதான் பெறுவது வழக்கம். அதனடிப்படையில், திருவாவடுதுறை ஆதீனத்திடம் இருந்து நம்நாட்டின் சுதந்திரத்தை பெற்றுக் கொள்ளலாம்"

என ராஜாஜி ஆலோசனை கூறியுள்ளார்.

அதை மவுன்ட்பேட்டனும், நேருவும் ஏற்றுக் கொண்டனர்.

இதையடுத்து அப்போது திருவாவடுதுறை ஆதீனத்தில் மடாதிபதியாக ஆட்சி பரிபாலனம் செய்து கொண்டிருந்த குருமகா சன்னிதானத்திடம் அரசு முறைப்படி விருப்பத்தை தெரிவித்தனர். ராஜாஜியின் வழிகாட்டுதலின்படி திருவாவடுதுறை ஆதீனத்தில் புதிதாக வெள்ளி செங்கோல் செய்யப்பட்டு அதில் தங்கத்தால் முலாம் பூசி தயாரிக்கும் வேலை நடந்தது.

அதற்கு ஆதீன முறைப்படி பூஜை, வழிபாடுகள் செய்யப்பட்டு குருமகா சன்னிதானம், அருளாசி வழங்கினார். அதை டில்லி கொண்டுசெல்ல அரசு சார்பில் சிறப்பு விமானம் ஏற்பாடு செய்யப்பட்டது. திருவாவடுதுறை ஆதீனத்தில் இருந்து கட்டளை தம்பிரான், ஓதுவார் மூர்த்திகள் இருவரையும் டில்லிக்கு அழைத்துச் சென்றனர்.

அங்கு, 1947ம் ஆண்டு ஆகஸ்ட் 14ம் தேதி நள்ளிரவு 12 மணிக்கு மவுன்ட் பேட்டன் பிரபுவிடம் இருந்து கட்டளை தம்பிரான் செங்கோலை பெற்று ஜவஹர்லால் நேருவிடம் வழங்கினார். அப்போது, திருஞானசம்பந்த பெருமான் பாடி அருளிய 'வேயுறு தோளிபங்கன், விடமுண்ட கண்டன்' என்ற கோளறு பதிகத்தை ஓதுவார் மூர்த்திகள் பாடினார்.

ஆக, இந்த பாரத தேசம் விடுதலை பெற்ற நிமிடத்திலேயே தமிழுக்கும், பக்தி இலக்கியத்துக்கும் மரியாதை செய்யப்பட்டுள்ளது. அதன் பிறகுதான் பாரத தேசத்தின் சுதந்திரம், நாட்டு மக்களுக்கு அறிவிக்கப்பட்டது.

சேது ஸ்ரீனிவாசன்

04.05.2020 அன்று **தினமலர் நாளிதழில்**
வெளிவந்த செய்தி

6 தினமலர் திருச்சி வெள்ளி மார்ச் 8, 2019

# பள்ளி பாடத்தில் இந்தியா சுதந்திரம் பெற்ற வரலாறு

## மத்திய, மாநில அரசுகளுக்கு வலியுறுத்தல்

ஆடுதுறை, மார்ச் 8-

இந்தியாவுக்கு சுதந்திரம் வழங்கப்பட்ட வரலாற்றில் தேவாரம் பதிகம் பாடி திருவாவடுதுறை ஆதீனத்தின் செங்கோல் வழங்கப்பட்டதை பள்ளி பாடங்களில் இடம் பெறச் செய்ய மத்திய, மாநில அரசுகள் முன்வர வேண்டும் என்று வலியுறுத்தப்பட்டுள்ளது.

சுதந்திர இந்தியாவில் ஆங்கிலேயரிடமிருந்து விடுதலை பெற்றதை அறிவிக்கும் வகையில் முதலில் தேவார பதிகம் பாடி செங்கோல் வழங்கிய சிறப்பை அனைவரும் அறிந்து கொள்ள வேண்டியதாகும். கடந்த 1947 ஆகஸ்ட் 15 நாம் எப்படி சுதந்திரம் பெற்றோம். நேருவை மவுண்ட் பேட்டன் அழைத்து, உங்கள் இந்தியாவிற்கு சுதந்திரம் கொடுக்கப் போகிறோம், அதை எப்படிக் கொடுப்பது என்று கேட்க, நேருவுக்கு குழப்பமாக இருந்தது.

எதை அடையாளமாக வைத்து சுதந்திரத்தைப் பெறுவது.....

(பிரிட்டிஷ் அரசு இந்தியாவுக்குசுதந்திரம் வழங்கியது என்பதற்கு எந்த சாசனமும் இல்லை).

உடனே நேரு மூதறிஞர் ராஜாஜியை அணுகி, எனக்கு இந்த நடைமுறைகள் தெரியாது, அதனால் தாங்கள்தான் தீர்வு கூற வேண்டும் என்றார்.

உடனே ராஜாஜி, கவலை வேண்டாம், எங்கள் தமிழகத்தில் மன்னர்களிடம் ஆட்சி மாற்றம் ஏற்படும் போது, ராஜகுருவாக இருப்பவர், செங்கோலை புதிய மன்னருக்கு கொடுத்து, ஆட்சி மாற்றம் செய்வர். நாமும் அன்னியன் கையால் சுதந்திரம் பெறுவதை விட, குரு மகானின் கையால் செங்கோலை பெற்று ஆட்சி மாற்றம் அடையலாம் என்றார்.

நேருவும் நேரம் குறைவாக உள்ளது. உடனே ஏற்பாட்டை செய்யுங்கள் என்று உத்தரவிட்டார்.

ராஜாஜி உடனே திருவாவடுதுறை ஆதீனத்தை தொடர்பு கொண்டு விஷயத்தைச் சொல்ல, அப்போது கடும் காய்ச்சலில் இருந்த ஆதீனம், உடனே முறையாக செங்கோல் தயாரித்து, தங்க முலாம் பூசி, இளைய ஆதீனம் தம்பிரான் பண்டார சுவாமிகளிடம் பொறுப்பை ஒப்படைத்து, கூடவே ஓதுவார் மூர்த்திகளையும் உடன் அனுப்பி வைத்தார். (தேவாரத்தில் இருந்து கோளறு பதிகம் பதினோரு பாடல்களை குறித்துக் கொடுத்தார். -இந்த பாடல்களை அப்போது ஓதுவார் மூர்த்திகள் பாட வேண்டும்).



திருவாவடுதுறை ஆதீன மடத்தில், செங்கோல் வைபவம் கறுப்பு வெள்ளை புகைப்படமாக உள்ளது. அந்த புகைப்படத்தில் 15.8.1947 அன்று கையில் செங்கோலுடன் ஜவஹர்லால் நேரு. அருகில் திருவாவடுதுறை ஆதீனம் தம்பிரான் பண்டார சுவாமிகள்.

ராஜாஜி அனுப்பிய தனி விமானத்தில் அவர்கள் செங்கோலுடன் டில்லி போய் சேர்ந்தனர். அப்போது ஆயிரம் ஆண்டு அடிமைத்தளையில் இருந்து, பாரதத்தின் விடுதலை பெறும் விழாவிற்காக எல்லோரும் காத்திருந்தனர். அந்த சுதந்திர வைபவ தினத்தில் மவுண்ட் பேட்டனிடமிருந்து செங்கோலை குருமகா சன்னிதானம் திருவாவடுதுறை ஆதீனம் தம்பிரான் பண்டார சுவாமிகள் பெற்று, செங்கோலுக்கு புனித நீர் தெளித்து, ஓதுவார் மூர்த்திகள், வேயிறு தோளிபங்கன் என்று துவங்கும் தேவார திருப்பதிகத்தை பாட, பதினோராவது பாடலின் கடைசிவரி, 'அடியார்கள் வானில் அரசாள்வர் ஆணை நமதே'

இந்த வரியை பாடி முடிக்கும் போதுதான், சுவாமிகள் செங்கோலை நேருவிடத்தில் கொடுத்தார். அந்த நிகழ்வின் கறுப்பு வெள்ளை புகைப்படம் திருவாவடுதுறை ஆதீனம் தலைமை மடத்தில் இன்றும் உள்ளது.

அந்த நிகழ்வைத்தான் நாம் சுதந்திர தினமாக கொண்டாடுகிறோம். தியாகிகள் பலரது உயிர் தியாகத்தால் இந்திய நாட்டின் சுதந்திரம் கிடைத்தது. அத்தகைய சுதந்திரம் கடந்த 1947ம் ஆண்டு ஆகஸ்ட் 15ம் தேதி தமிழ்மொழியில் பதிகம் பாடி செங்கோல் வழங்கப்பட்டுள்ளது சிறப்புக்குரியது.

இந்த நிகழ்வு தமிழுக்கும் தமிழகத்திற்கும் எவ்வளவு பெருமை. இந்த வரலாற்று உண்மையை பாடப் புத்தகத்தில் வெளியிட்டு, நாடறியச் செய்ய வேண்டும் என்று கோவிந்தபுரம் பிரம்மஸ்ரீ விட்டால்தான் மகராஜ், அம்மன்பேட்டை ஸ்ரீமத் கிருஷ்ணானந்த மகராஜ் மற்றும் சமூக ஆர்வலர்கள் பலரும் வலியுறுத்தியுள்ளனர்.

08.03.2019 அன்று **தினமலர் நாளிதழில்**
வெளிவந்த செய்தி

துக்ளக்
நிறுவிய ஆசிரியர்: சோ THUGLAK Tamil Weekly 5-5-2021 ரூ.15-00

# தமிழக ஆதீனம், நேருவுக்கு அளித்த சுதந்திரச் செங்கோல் - 15.8.1947

**க**டந்த இரு வாரங்களில் நம் ஆன்மிக பாரம்பரியம்தான், விஸ்தாரமான மதச் சுதந்திரமாக அரசியல் சாஸனத்தில் வடிவெடுத்தது என்பதைப் பார்த்தோம். இந்த வாரம், தமிழக ஆன்மிக பாரம்பரிய செங்கோல் (15.8.1947) நம் நாட்டு சுதந்திரத்தின் அடையாளச் சின்னமாகிய அதிசய நிகழ்வு பற்றியும், சுதந்திர அரசாணைக்கு அடையாளமாக அந்த செங்கோலை பிரதமர் நேருவுக்கு அளித்த பெருமை எப்படி தமிழகத்துக்கு, திருவாவடுதுறை ஆதீனத்தின் மூலமாக கிடைத்தது என்பதைப் பார்ப்போம். நம் அரசியல் சாஸனத்தில் தமிழகத்தின் ஆன்மிக சிந்தனை, நம் சுதந்திரத்தின் அடையாளமான தமிழக ஆன்மிக செங்கோல் - இரண்டும் சுதந்திர பாரத சரித்திரத்தில் தமிழகத்துக்கு மட்டுமே கிடைத்த பாக்கியங்கள்.

நம் நாடு சுதந்திரம் பெறப்போகும் நாள் 15.8.1947 நள்ளிரவு என்று குறித்தாகிவிட்டது. அப்போது பிரிட்டிஷ் அரசின் பிரதிநிதி (வைஸ்ராய்) மவுண்ட் பேட்டன். அவரிடமிருந்து சுதந்திர அரசாணையை பெறப்போகும் இந்திய பிரதமர் ஜவஹர்லால் நேரு. இருவரும் ஒரு காகிதத்தில் கையெழுத்துப் போட்டால், சட்டப்படி அதிகாரம் மாறிவிடும். அதைச் செய்வது சுலபம். ஆனால், அதற்கு அனுசரிக்க வேண்டிய சடங்கு என்ன? ஆங்கிலேயர்கள், ''நீங்கள் எப்படி, எந்தச் சடங்கை நடத்தி, எந்த உயர் அடையாளக் குறியை [symbol] வைத்து எங்களிடமிருந்து அரசாளும் உரிமையைப் பெறப் போகிறீர்கள்'' என்று கேட்க, நம்மவர்கள் விழித்தனர்.

சாதாரண நிகழ்வு அல்ல அது. 100 ஆண்டுகள் போராடி ஆயிரக்கணக்கானோரின் உயிர்த் தியாகத்தால் வந்த சுதந்திரம், உணர்வுபூர்வமான நிகழ்வு. வெறும் ஆட்சி மாற்றம் அல்ல. அதற்கு ஒரு தூய அடையாளம், சடங்கு தேவை. அப்போதுதான் தமிழகத்துக்கும், தமிழகத்தின் ஆன்மிகத்துக்கும், தமிழ்த் திருமுறைக்கும், தமிழ் ஆதீனத்துக்கும் பெருமை சேர்க்கும் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த அந்தப் பெரும் நிகழ்வு நடந்தது. சுதந்திர பாரதத்தை அரசாளும் உரிமையின் ஆன்மிக, தார்மிக அடையாளம் திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் தயாரித்தளித்த (தமிழக மன்னர்கள் செலுத்திய) பாரம்பரியச் செங்கோல்தான். திருவாவடுதுறை ஆதீனத்தின் ஆணைப்படி உம்மிடி பங்காரு செட்டி அதைத் தயாரித்தார். திருவாவடுதுறை ஆதீனத்தின் இளைய தம்பிரான், பிரிட்டிஷ் வைஸ்ராயான மவுண்ட் பேட்டனிடம் அதைக் கொடுத்தார். பிறகு, அதை இளைய ஆதீனம் வாங்கி, கங்கை நீரால் புனிதப்படுத்தி, இறை நாமத்தை உச்சரித்து ஆசிர்வதித்து, அரசாணையின் புனித அடையாளமாக அந்தச் செங்கோலை தன் கையால் நேருவிடம் கொடுக்க, அவர் அதை சுதந்திர அரசின் ஆன்மிக அடையாளமாக ஏற்றார். சரித்திரம் படைத்த அந்தச் சடங்கு முடியும்போது, 'அரசாள்வர் ஆணை நமதே' என்று முடியும் திருஞானசம்பந்தரின் கோளறு பதிகம் பாடப்பட்டது. திருவாவடுதுறை ஆதீனம் ஆசிர்வதித்துக் கொடுத்த செங்கோல்தான், பிரதமர் நேரு பெற்ற தார்மிக அரசாளும் உரிமையின் அடையாளம். மவுண்ட்பேட்டனிடமிருந்து செங்கோலை பிரதமரே நேராகப் பெறலாமே, ஏன் நடுவில் ஆதீனம்? அது ஒரு ஆன்மிக சூட்சுமம்.

### பெரியவர் எதேச்சையாக பதிவு செய்த சரித்திரச் சம்பவம் - 15.8.1978

இந்த அதிசய சரித்திரத்தை நினைவு கூறியவர் காஞ்சிப் பெரியவர். அவர் கூறியதை என்னிடம் சொன்னவர் அவரது நிழலிலேயே வாழ்நாள் முழுவதும் கழித்த ராஜாகோபலன். இஞ்ஜினியரிங் படித்த அவர் ஆன்மிகத்தில் திளைத்தார். இறுதியில் சன்யாசம் ஏற்று, 'மேட்டூர் ஸ்வாமிகள்' என்றான அவர், சமாதி அடையும் வரை பெரியவர் கூறியதைப் பதிவு செய்யவில்லை. என்னைப் பரவசப் படுத்திய அந்த அனுபவத்தை மஹானிடமிருந்து நேரிடையாக கேட்ட யாராவது அதைப் பதிவு செய்திருக்கிறார்களா என்று தேடிவந்தேன். அந்த பாக்கியம் பெற்ற டாக்டர் பி.ஆர்.சுப்ரமணியம் அதைப் பதிவு செய்து, அது சென்ற ஆண்டு புத்தக வடிவிலும் வெளிவந்துவிட்டது என்பதை அறிந்தேன். அவர் மருத்துவர். ஆனால் தேவாரத்தில் அவர் கொண்ட நாட்டத்தால், அவர் 'தேவார டாக்டர்' என்று பிரபலமானார். அந்தப் புத்தகத்தில் இருந்தும், அதற்கு மேலும் கிடைத்த விவரங்களையும் தொகுத்து இங்கு தருகிறேன்.

திருஞானசம்பந்தரின் கோளறு பதிகத்தின் பெருமையைப் பற்றிக் கூறும்போது, எதேச்சையாக சரித்திரம் படைத்த அந்தச் செங்கோல் சம்பவத்தைப் பெரியவர் கூறினார் என்று தேவார டாக்டர் புத்தகத்திலிருந்து தெரிகிறது. அப்போது சுதந்திரம் வந்து 31 ஆண்டுகள் ஓடிவிட்டன. டாக்டரிடம் பெரியவர் கோளறு பதிகத்தைப் பற்றிப் பேசவில்லை என்றால் செங்கோல் சரித்திரம் யாருக்கும் தெரிந்திருக்காது. அதை



**- எஸ்.ஜி.**

துறைசை ஆதீன நிழற்படங்கள்



05.05.2021 அன்று **துக்ளக் இதழில்** வெளிவந்த செய்தி

# செங்கோல் இருக்கும் இடம்

**ஜூ**னியர் விகடன் (13.4.2019) இணையதளம் **'ஆட்சி மாற்றத்தை அடையாளப்படுத்திய செங்கோல்! - சொல்ல மறந்த உண்மைக் கதை இது...'** என்கிற தலைப்பில் இளைய தம்பிரான் கையில் இருந்து பிரதமர் நேரு செங்கோல் பெரும் ஃபோட்டோவை செய்தியுடன் வெளியிட்டிருந்தது★★★. 20-ஆவது சந்நிதானத்தின் உதவியாளர் (தற்போது துபாய் நாட்டில் மகன் வீட்டில் வசித்து வரும்) 94 வயது மாசிலாமணி பிள்ளையை, அவரது மகன் மூலம் தொடர்பு கொண்டு ஜூனியர் விகடன் நிருபர் கேட்டபோது, ''ஆதீனம் அந்த நேரத்தில் கடும் காய்ச்சலில் இருந்தார். ஆனாலும், சென்னையில் பிரபலமாக இருந்த உம்மிடி பங்காரு செட்டியார் நகைக் கடையில், சைவச் சின்னம் பொறித்த தங்கத்திலான செங்கோல் ஒன்றைத் தயாரித்துத் தரும்படிக் கேட்டுக் கொண்டார். அதன் எடையும், விலையும் தற்போது எனக்கு நினைவில் இல்லை. ராஜாஜி ஏற்பாடு செய்த தனி விமானத்தில், ஆதீன மடத்தின் கட்டளை சாமியாக இருந்த சடைச்சாமி என்றழைக்கப்படும் திருவதிகை குமாரசாமி தம்பிரானையும், மடத்தின் ஓதுவார்களையும் டெல்லிக்கு அனுப்பி வைத்தார்கள். கூடவே, மங்கள இசை முழங்க மடத்து வித்வான் திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளை குழுவினரும் சென்றனர்.



**செங்கோலுடன் நேரு**

''1947-ஆம் ஆண்டு ஆகஸ்ட் 14-ஆம் தேதி இரவு 11.45 மணிக்கு, தேவாரத்தில் கோளறு பதிகத்திலுள்ள 11 பாடல்களைப் பாடுமாறு குருமகா சந்நிதானம் அருளியிருந்தார். அதன்படி 'வேயுறு தோளிபங்கன்' எனத் தொடங்கும் தேவாரத் திருப்பதிகத்தின் 11-ஆவது பாடலின் கடைசி அடியான, 'அடியார்கள் வானில் அரசாள்வர் ஆணை நமதே' என்று பாடி முடிக்கும்போது, மவுண்ட்பேட்டனிடமிருந்து செங்கோலை சடைச்சாமி பெற்று, அதன் மீது புனிதநீரைத் தெளித்து, இறைநாமம் உச்சரித்து, நேருவிடம் கொடுத்தார். இது தமிழுக்கும் தமிழ்நாட்டுக்கும் பெருமை சேர்த்த விஷயமாகும். நேரு கையில், செங்கோலை சடைச்சாமி தரும் அரிய புகைப்படம் திருவாவடுதுறை ஆதீன மடத்தில் உள்ளதை இன்றும் காணலாம்'' என்றார். ஆதீன மடத்தின் நூலகத்தில் நீண்டகாலம் பணியாற்றிய நாராயணசாமி... ''பிரயாக்ராஜ் (அலஹாபாத்) நகரில் உள்ள நேருவின் இல்லமான ஆனந்தபவன், அருங்காட்சியகமாக மாற்றப் பட்டிருக்கிறது. ஆதீனம் வழங்கிய செங்கோல், தற்போது அங்குதான் வைக்கப்பட்டுள்ளது'' என்றார்.

★★★https://www.vikatan.com/government-and-politics/miscellaneous/150105-thiruvavaduthurai-adheenam-story

டாக்டர் குறிப்பு எடுக்கவில்லை என்றாலும் அந்தச் சம்பவத்தைப் பற்றி நாம் அறிந்திருக்க மாட்டோம். பல முறை சைவத் திருமுறையின் பெருமை பற்றித் தன்னிடம் பெரியவர் பேசியவற்றைக் குறிப்பெடுத்து, 'பொன்னார் மேனியனுடன் பொன்னான நாட்கள்' என்று மூன்று பாகங்களில் வெளியிட்டிருக்கிறார் தேவார டாக்டர்★★. சுதந்திர தினச் செங்கோல் நிகழ்வு பற்றிப் பெரியவர் கூறியதை, 'பொன்னார் மேனியனுடன் பொன்னான நாட்கள்' 3-ஆம் பாகத்தில் 'கோளறு பதிகமும் இந்திய சுதந்திரமும்' என்கிற தலைப்பில் (பக் 120-122) காணலாம். அதை பெரியவரின் சம்பாஷணை பாணியிலேயே கொடுக்கிறேன். (சம்பாஷணையில் 'குரு' என்பது பெரியவரைக் குறிக்கும். 'நாங்கள்' என்பது தேவார டாக்டர், அவரது நண்பர்களைக் குறிக்கும்).

## நேரு ராஜாஜியை கேட்க, ராஜாஜி திருவாவடுதுறை ஆதீனத்தை அணுகினார்

1947-ல் நடந்தது பற்றி, 1978-ல், இப்படித் துவங்கினார் காஞ்சி மஹான்.

**குரு:** சுதந்திர தினம் நம்ம நாட்டுக்கு என்னைக்கு?

**நாங்கள்:** 1947 ஆகஸ்ட் 15. (அந்தச் சமயம் 1978-ஆம் வருடச் சுதந்திர தினம்)

**குரு:** இந்தியாவுக்கு ஸ்வராஜ்யம்-ஸ்வதந்த்ரம் கொடுக்கறது, அப்படீன்னு பிரிட்டிஷ்காரா தீர்மானம் பண்ணினா. அப்போ Lord Mountbatten - தான் கவர்னர் ஜெனரல் - Viceroy. ராஜாஜிதான் முதல் கவர்னர் ஜெனரலா வர இருந்தார். Mountbatten நேருவைக் கூப்பிட்டு, 'உங்களுக்கு ஸ்வதந்த்ரம் கொடுக்கத் தீர்மானம் ஆயிருக்கு. அதை எப்படிக் கொடுக்கறது? நீங்கள் அதை எப்படி வாங்கிக்கப் போறேள்?' னு கேட்டார். நேருவுக்கு என்ன செய்யறது, எதை அடையாளமா வைச்சு அதை வாங்கறதுன்னு ஒண்ணும் புரியலை. ராஜாஜியை கூப்பிட்டு, 'நீங்கள்தான் இதற்கு ஒரு solution கொடுக்கணும்' னு கேட்டார். ராஜாஜி தமிழர். அவர்,



ராஜாஜி



05.05.2021 அன்று **துக்ளக் இதழில்**
வெளிவந்த செய்தி

தமிழ்நாட்டில் ராஜாக்கள் ஆட்சி பண்ணினப்போ, புது ராஜாவுக்கு ராஜ்ய பட்டாபிஷேக சமயத்திலே கையில் செங்கோல் கொடுப்பா, அதுதான் புது ராஜாங்கம் தொடங்கினதுக்கு அடையாளம். நாம பிரிட்டிஷ்காரன் கையில் இருந்து ராஜாங்கத்தை வாங்கிக்கறதை விட, நம்ம தமிழ்நாட்டில் இருக்கிற குருவோட கையால செங்கோலை வாங்கிக்கலாம்னு தீர்மானிச்சார்''. பிறகு என்ன நடந்தது?

## செங்கோல் கொடுத்து 'அரசாள்வார் ஆணை நமதே' என்று கூறி நேருவுக்கு ஆசீர்வாதம்

தொடருகிறார் மஹான்.

''நமசிவாயமூர்த்திகள் தொடங்கி திருவாவடுதுறையில் ஆதீனம் இருக்கு. அவாளைக் கேட்கலாம்னு ஆதீனத்துக்கு



ஆதீனகர்த்தர் அம்பலவாண தேசிக பரமாச்சாரியார்

தகவல் அனுப்பிச்சார் ராஜாஜி. அப்போ குரு மஹாஸன்னிதானத்துக்கு நல்ல ஜுரம். அவர் உடனே செங்கோல் ஒண்ணு தயார் பண்ணி, அதுக்கு தங்க முலாம் பூசி, கட்டளை சாமி (இளைய தம்பிரான் சுவாமி) கிட்டே பொறுப்பைக் கொடுத்து டெல்லி அனுப்பினார். கூடவே இரண்டு ஓதுவா மூர்த்திகளையும் அனுப்பிச்சார். அவாகிட்டே ஞானசம்பந்தரோட கோளறு திருப்பதிகம் பூராத்தையும் குறிச்சுக் கொடுத்து பதவி ஏற்புல பாடச் சொன்னார். Special plane -லே அவா செங்கோலை எடுத்துண்டு டெல்லி போனா.

''மவுண்ட்பேட்டன்கிட்டே செங்கோலைக் கொடுத்து, அதை கட்டளை சுவாமி திரும்ப வாங்கி, அதுக்கு கங்கை தீர்த்தம் எல்லாம் தெளிச்சு சுத்தியாக்கி தன் கையிலே வச்சுண்டார். ஓதுவா மூர்த்திகள் கோளறு திருப்பதிகம் பூராப் பாடி கடைசி வரியில், 'அரசாள்வார் ஆணை நமதே' அப்படீன்னு திருஞானசம்பந்தர் சொன்ன வரியைப் பாடி முடிக்கறப்போ, கட்டளைத் தம்பிரான் சுவாமி நேரு கையிலே அந்தச் செங்கோலைக் கொடுத்து ஆசீர்வாதம் பண்ணினார். 'சொல்மாலை' ன்னு பூராப் பதிகத்தையும் பாடினர் ஓதுவார் மூர்த்திகள். நாம இன்னிக்கு சுதந்திர தினம்னு கொண்டாடறது இந்த event வைச்சுத்தான். நம்ம History Book -ல எல்லாம் இந்த event -ஐ போடணும். ஆனா 31 வருஷமா இதுவரைக்கும் போடலை.''

(இன்று வரை 2019 வரை at least தமிழ்நாடு State Text book -களில் கூட இது பற்றி எந்த குறிப்பும் சுதந்திர தினம் பற்றி எழுதப்படவில்லை. இது எவ்வளவு பெரிய தமிழர் பெருமை என்று குறிப்பிடுகிறார் தேவார டாக்டர்).

**குரு:** இப்படி ஞானசம்பந்தர் தேவாரம்தான் சுதந்திர தினத்துக்கு அடையாளமா நம்ம தேசத்துக்கு அமைஞ்சிருக்கு. அவர் கூறியது போலத்தான் ராஜ்ய பரிபாலனம் நடந்துண்டு இருக்கு. அரசாள்வர் ஆணை நமதே நடந்துண்டு இருக்கு. 1978 மார்கழி மாதம் திருவாவடுதுறை சென்று இருந்தேன். கோமுத்தீஸ்வரரையும், திருமூலரையும் தரிசித்து விட்டு ஆதீனத்துக்குள் போகாமல் வந்துவிட்டேன். அதனால் ஃபோட்டோவைப் பார்க்கவில்லை. தற்போது ஆதீனத்தின் 24-ஆவது பட்டம் அம்பலவாண தேசிக பரமாச்சார்யார் அவர்களை அடிக்கடி சந்திக்கும்போது எல்லாம், அங்கே வைக்கப்பட்டிருக்கும் கட்டளை தம்பிரான் சுவாமியும் - நேருவும் கையில் செங்கோலுடன் உள்ள ஃபோட்டோவைப் பார்க்கும்போது, குருநாதரின் (ஞானசம்பந்தரின்) 'அரசாள்வார் ஆணை நமதே' நினைவுக்கு வரும்'' ★★ என்று முடித்தார் பெரியவர்.

எவ்வளவு முக்கியமானதாக, சுதந்திர இந்தியாவின் ஆன்மிக அடையாளமாக அந்தச் செங்கோல் நிகழ்வு கருதப்பட்டிருந்தால், (ஸ்பெஷல் விமானம் என்பது அரிதாக இருந்த அந்த காலத்தில்) அரசாங்கம் அதைக் கொண்டுவர ஸ்பெஷல் விமானத்திற்கு ஏற்பாடு செய்திருக்கும்?

(செங்கோல் நிகழ்வு பற்றி, மேலும் சில விவரங்களை ஜூனியர் விகடன் (ஏப்ரல் - 2019) வெளியிட்டது. பெட்டிச் செய்தியில் பார்க்கலாம்)

## தெரிந்துகொள்ள வேண்டிய சூட்சுமம், மறைக்கப்பட்ட சரித்திரம்

ஆங்கிலேய அரசின் கையிலிருந்து அரசாணையைப் பெறாமல், நம் நாட்டு ஆன்மிக பாரம்பரிய முறைப்படி ஒரு ராஜகுருவிடமிருந்து நமது பிரதமர் பெற்றது ஏன் என்பது, நாம் தெரிந்துகொள்ள வேண்டிய ஆன்மிக சூட்சுமம். அதுவும் ஞானசம்பந்தரின் 'அரசாள்வார் ஆணை நமதே' என்கிற தெய்வீக வாக்குறுதியுடன். கடவுள் நம்பிக்கை இல்லாத நமது பிரதமர் நேரு கூட, வெள்ளையர்களிடமிருந்து சுதந்திர பாரதத்துக்கு அரசு மாறுவது, ஒரு புனிதமான நிகழ்வு என்று கருதித்தான் அதை எப்படிச் செய்வது என்று ராஜாஜியிடம் ஆலோசனை கேட்டார். அவரை அப்படிக் கேட்க வைத்ததும்



05.05.2021 அன்று **துக்ளக் இதழில்**
வெளிவந்த செய்தி



இறையருள்தான். தமிழரானதால்தான் ராஜாஜி அரசாட்சியின் தார்மீக, ஆன்மிக சூட்சுமத்தை உணர்ந்து ஆதீனத்தை அணுகினார். அவர் அனுப்பிய இளைய தம்பிரான், மௌண்ட்பேட்டனின் கையிலிருந்து செங்கோலை வாங்கி, அதை கங்கை நீரால் சுத்தி செய்து பிரதமர் நேரு கையில் கொடுத்தார். அதுவும் ஆன்மிக சூட்சுமம். முதல் சுதந்திரப் போராட்டத்தை நசுக்கி, ஜாலியன்வாலாபாக் போன்ற பல அட்டூழியங்களைச் செய்த ஆங்கிலேய அரசிடமிருந்து நேரடியாக பிரதமர் நேரு செங்கோலை வாங்கக் கூடாது. ஆன்மிகத்தால் சுத்தி செய்யப் பட்ட செங்கோல்தான் பிரதமரிடம் கொடுக்கப்பட வேண்டும் என்பதே அந்த சூட்சுமம். ஆனால் தமிழகம் பெருமைப்பட வேண்டிய இந்த நிகழ்வு அப்படியே மறைக்கப்பட்டு விட்டது. இந்த விவரங்கள் எல்லாம், நமது சுதந்திரம் பற்றிய பாடப் புத்தகங்களில் இடம் பெறவேண்டும் என்று காஞ்சி மஹான் விரும்பியது என்றாவது நிறைவேறும் என்று நம்பு வோம்.

என்னிடம் இந்த நிகழ்வை கூறிய மேட்டூர் சுவாமி, 'இன்றைய பாரதத்தில் இது போன்ற புனித நிகழ்வு நடந்தால், நம் செக்யுலர்வாதிகள் அதை எவ்வளவு கேவலப்படுத்துவார்கள்' என்று அன்று கேட்டது, இதை எழுதும்போது நினைவுக்கு வந்தது.

★★ **பொன்னார் மேனியனுடன் பொன்னான நாட்கள் ஆசிரியர்: சுப்பிரமணியம்.ரா கௌதமன் கோபாலன் சிம்சுபா டிரஸ்ட்.**

**(தொடரும்)**









05.05.2021 அன்று **துக்ளக் இதழில்**
வெளிவந்த செய்தி

ௐ

THIRUCHIRRAMBALAM

# BLESSINGS

TO

SRIJAT Dr. RAJENDRA PRASAD,
PRESIDENT OF THE INDIAN REPUBLIC

AND

SRIJAT PANDIT JAWAHARLAL NEHRU,
THE PREMIER,
MINISTERS AND MEMBERS OF THE PARLIAMENT OF
THE REPUBLIC OF INDIA.

BY

His Holiness
Sri La Sri. Ambalavana Desiga Swamigal
MAHASANNIDHANAM
OF THIRUVAVADUTHURAI ADHEENAM OF THIRUKKAILAYAM

GIVEN ON

THE FIRST REPUBLIC DAY

26—1—1950

**26.01.1950** அன்று ஆதீனத்து 20 ஆவது குருமூர்த்திகள்
அவர்கள் **முதல் குடியரசு தின விழாவில்**
வழங்கிய ஆசிமொழிகள்

உ

திருச்சிற்றம்பலம்

# BLESSINGS.

On this historic and solemn day, which sees the Republic of India, we invoke the blessings of the Almighty Lord Siva, who manifests Himself in different forms and different names to different people in different levels of evolution, on the Republic of India, on Dr. Rajendra Prasad, who has the unique honour of being the first President, on Pandit Jawaharlal Nehru, our popular Premier, who has won the affection of the people and the admiration of the World, on the Ministers and Members of Parliament, who have the extreme honour of being the first administrators and legislators of the new-born Republic and convey the blessings to all of those honoured personages on our behalf and on behalf of millions of our religious followers.

This day is the most remarkable one in the history of the world, and those that are living to-day are proud of those that were responsible for this happy day, and praise and bless the memory of those whom He has chosen to be with Him.

We earnestly pray the Almighty to bless our Republic and people to be the divine source for bringing and spreading eternal peace and harmony in the world and thus aid humanity in the onward march to perfection.

**26.01.1950** அன்று ஆதீனத்து 20 ஆவது குருமூர்த்திகள்
அவர்கள் **முதல் குடியரசு தின விழாவில்**
வழங்கிய ஆசிமொழிகள்

In keeping with the sacred tradition on solemn occasions like this, we present the administrators and legislators of the Republic with never-fading flowers of ever-lasting fragrance, that have blossomed in the sacred South; though the divine plants that blossomed forth these flowers are of the Tamil land, their roots of wisdom have gone far and far deep breaking all the barriers made by the ignorance of man and have taken their fragrance from the deepest soil where lies the universal human culture. It is our fervent hope that these fifty-two flowers, offered at the feet of our sacred Motherland, will give marvellous results and the Mother will produce many more Buddhas and Gandhis to keep aloft the torch of wisdom and spread love and peace throughout the World.

Blessed be the Universe,
Blessed be the Republic,
Blessed be the people.

*Mahasannidhanam,*
*Thiruvavaduthurai Adheenam.*

**Acknowledgement is made to the translation of " Thirukkural " and " Thiruvachagam " by Rev. G. U. Pope from which couplets of " Valluvar's sayings " and one song of Thiruvachagam are taken.**

**26.01.1950** அன்று ஆதீனத்து 20 ஆவது குருமூர்த்திகள் அவர்கள் **முதல் குடியரசு தின விழாவில்** வழங்கிய ஆசிமொழிகள்



SIVAMAYAM.

THE ADDRESS PRESENTED TO

# SRI PANDIT JAWAHARLAL NEHRUJI,

The First Premier of Free India on the Celebration

OF

The Independence Day, 14th August 1947

at 11-45 p. m. at New Delhi

BY

His Holiness

## Sri La-Sri AMBALAVANA DESIKA PARAMACHARYA SWAMIGAL

THE TWENTIETH MAHA SANNIDHANAM

SAIVA SIDDHANTA

STHAPANACHARIAR OF TIRUVAVADUTHURAI ADHEENAM

OF MEIKANDA SANTHANAM,

ESTABLISHED BY SRI NANDI DEVAR,

OF THE LINE OF SRI KAILAS.

We, the twentieth in the order of succession of Thiruvavaduthurai Adheenam, established by His Holiness Sri Panchakshara Desika Paramachariar, the seventh in the line of Meikanda Santhanam, whose successors for the welfare of humanity have propagated the worship of Sri Nataraja as also the worship of great souls, and preached universal brotherhood, the corner-stone of Saiva Siddhantha Philosophy through the great

திருவாவடுதுறை ஆதீன வெளியீட்டு நூலில்
(வெளியீடு எண் : 40) இடம்பெற்றுள்ள 20 ஆவது குருமூர்த்திகள்
அருளிய **சுதந்திர தின ஆசி செய்தி.**

Kings of the Tamil Nad in the glorious past and the Emperor Asoka the Great were reputed for their benevolent rule, establishing peace and prosperity in their domains The fine craftmanship of our manufactures, pearls, and other valuable products attracted merchants from even the distant land of Greece, whose ancient civilization still elicits admiration from all the civilised Nations of the World. Warriors from Rome and Greece flocked to our country, seeking Military service under the great Emperors and Kings of India.

But for some centuries in the past, our great continent has lost her glory under foreign domination. The sons of the soil have lost their originality, culture and wealth, and have very nearly been reduced to serfdom and a state of abject poverty and dependence.

At this critical juncture came the galaxy of the great sons and daughters of India, like Dadha Bai Naoroji, Bala Gangadhara Tilak, Lala Lajpat Rai, Desabhandu C. R. Das, Gopalakrishna Gokhale, Mrs. Annie Besant, The Ali Brothers, The Tamilian Navigator, V. O. Chidambaram Pillai, the Originator of the National Mercantile Marine, the great Tamil National Poet, Subramania Bharathi, and other National leaders,

திருவாவடுதுறை ஆதீன வெளியீட்டு நூலில்
(வெளியீடு எண் : 40) இடம்பெற்றுள்ள 20 ஆவது குருமூர்த்திகள்
அருளிய **சுதந்திர தின ஆசி செய்தி.**

whose services in the cause of freedom will for ever be remembered by our countrymen with gratitude. They were struck with the miserable lot of our people and worked with zeal and vigour for attaining independence, practising the noblest doctrines of "AHIMSA" and "RETURNING GOOD FOR EVIL," extolled in the greatest of all ethical works KURAL, as the true marks of culture. The people of India will ever revere you in their memory and enshrine your name in their hearts for having won the freedom of this great land of ours, by ceaseless striving, self-sacrifice and noble service.

Our dreams have now been realised. India will again take her rightful place among the Nations of the World. We can now look forward to rapid progress in all directions and we hope that peace and prosperity will soon be established in this land of ancient glory. The home of truth and philosophy, we hope will not succumb to Godlessness, but will contribute her share to the knowledge, culture, solidarity, peace and prosperity of the world.

May this renowned Son of Mother India, Sri Jawaharlal Nehruji live long and render still more valuable service in the years to come, by making this land of plenty flowing with milk and honey, and contribute his mite to the realization of the ONE WORLD IDEA !

Sri Venkateswar Press Kumbakonam

திருவாவடுதுறை ஆதீன வெளியீட்டு நூலில்
(வெளியீடு எண் : 40) இடம்பெற்றுள்ள 20 ஆவது குருமூர்த்திகள்
அருளிய **சுதந்திர தின ஆசி செய்தி.**



திருவாவடுதுறை ஆதீனம் 20 - ஆவது குருமூர்த்திகள்
**ஸ்ரீ அம்பலவாண தேசிகர்** அவர்கள்
முதல் குடியரசுத் தலைவர். திருமிகு. **ராஜேந்திர பிரசாத்**
அவர்களுடன் உரையாடல்
நாள்: 30.04.1944



திருவாவடுதுறை ஆதீனம் 20 - ஆவது குருமூர்த்திகள்
**ஸ்ரீ அம்பலவாண தேசிகர்** அவர்கள்
முதல் குடியரசுத் தலைவர்.திருமிகு. **ராஜேந்திர பிரசாத்**
அவர்களிடம் கஸ்தூரிபாய் நிதிக்காக ரூ.**35,000** அளித்தார்கள்

நாள்: 30.04.1944



திருவாவடுதுறை ஆதீனம் 21 – ஆவது குருமூர்த்திகள்
**ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர்** அவர்கள்
(17.12.1962) அன்று தேசிய பாதுகாப்பு நிதிக்கு
சென்னை முதலமைச்சர். திரு. **காமராசர்** அவர்களிடம்
ரூ.**65,000** மும், **3,315** கிராம் தங்கமும் அளித்தார்கள்.



திருவாவடுதுறை ஆதீனம் 21 - ஆவது குருமூர்த்திகள்
**ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர்** அவர்களை
சென்னை முதலமைச்சர். திரு. **காமராசர்** அவர்கள்
சந்தித்து ஆசி பெறுதல்



திருவாவடுதுறை ஆதீனம் 22 - ஆவது குருமூர்த்திகள்
**ஸ்ரீ அம்பலவாண தேசிகர்** அவர்களை
பாரதப் பிரதமர். திரு. **ஸ்ரீ மொரார்ஜிதேசாய்** அவர்கள்
சந்தித்து ஆசி பெறுதல்
நாள்: 18.01.1997




திருவாவடுதுறை ஆதீனம் 22 - ஆவது குருமூர்த்திகள்
**ஸ்ரீ அம்பலவாண தேசிகர்** அவர்களை
பாரதப் பிரதமர். ஸ்ரீமதி. **இந்திராகாந்தி** அவர்கள்
சந்தித்து ஆசி பெறுதல்



திருவாவடுதுறை ஆதீனம் 22 - ஆவது குருமூர்த்திகள்
**ஸ்ரீ அம்பலவாண தேசிகர்** அவர்களை
தமிழக ஆளுனர். மேதகு. **பிரபுதாஸ் B. பட்வாரி** அவர்கள்
(20.02.1978) அன்று சந்தித்து ஆசி பெறுதல்




திருவாவடுதுறை ஆதீனம் **24 - ஆவது ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம்** அவர்களை (19.04.2022) அன்று தமிழக ஆளுநர் மேதகு. **ஆர்.என்.ரவி** அவர்கள் சந்தித்து ஆசி பெற்றார்கள்.



திருவாவடுதுறை ஆதீனம் 24 – ஆவது குருமகா சந்நிதானம்
**ஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள்** அவர்கள்
75 ஆவது சுதந்திர தின நன்னாளில் ஆதீனத் தலைமை மடத்தில்
இந்திய தேசியக் கொடியினை ஏற்றிவைத்தருளல்.



திருவாவடுதுறை ஆதீனம் 24 – ஆவது குருமகா சந்நிதானம்
**ஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள்** அவர்கள்
75 ஆவது சுதந்திர தின நன்னாளில் ஆதீனத் தலைமை மடத்தில்
இந்திய தேசியக் கொடியினை ஏற்றிவைத்தல்.











திருவாவடுதுறை ஆதீனத் தலைமை மடத்தில்
நாட்டின் 75 ஆவது சுதந்திர தின விழா நிகழ்வுகள்
நாள்: (15.08.2022)











திருவாவடுதுறை ஆதீனத் தலைமை மடத்தில்
நாட்டின் 75 ஆவது சுதந்திர தின விழா நிகழ்வுகள்
நாள்: (15.08.2022)

# திருவாவடுதுறை ஆதீனம்

# செங்கோல் சிறப்பு

**மௌன்ட்பேட்டன் பிரபு, நேரு** அவர்களை அழைத்து உங்கள் இந்திய நாட்டிற்கு சுதந்திரம் கொடுக்கப்போகின்றோம் என்று கூற அதனை எவ்வாறு ஏற்பது என்று நேரு அவர்கள் சிந்தித்தார். **மூதறிஞர் இராஜாஜி** அவர்களை அணுகி ஆலோசனை கேட்டார். உடனே இராஜாஜி அவர்கள், எங்கள் தமிழகத்தில் மன்னர்களின் ஆட்சிமாற்றம் நிகழும்போது இராஜகுருவாக இருப்பவர் புதிய மன்னருக்குச் செங்கோலைக் கொடுத்து ஆட்சிமாற்றத்தை ஏற்படுத்துவர். நாமும் அந்நியர் கையால் சுதந்திரம் பெறுவதைவிடக் குருமகானின் திருக்கரத்தால் செங்கோலைப் பெற்று ஆட்சிமாற்றம் செய்வதே சிறப்பு என்றார். நேரு அவர்கள் அதற்கு இணங்கவே இராஜாஜி அவர்கள் உடனே **திருவாவடுதுறை ஆதீனத்தைத்** தொடர்புகொண்டு செய்தியைக் கூற அப்போது அருளாட்சியில் இருந்த **20 - ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீ அம்பலவாண தேசிகர்** அவர்கள் திருமேனி நலம் குறைவாக இருந்தபோதும் உடனே செங்கோல் தயாரித்துத் தங்கமுலாம் பூசி நந்தியையும் பதித்து அதனை **ஆதீனத் தம்பிரான் சுவாமிகளிடம்** வழங்கிப் பொறுப்பை ஒப்படைத்தார்கள். டில்லியில் ஆதீன நாதஸ்வர வித்வான் **ராஜரத்தினம் பிள்ளை** அவர்களின் மங்கள இசையில் மௌன்பேட்டனிடம் இருந்து செங்கோலைப் பெற்றுப் புனித நீர் தெளித்து ஓதுவாமூர்த்திகள் "**வேயுறுதோளிபங்கன்**" என்று தொடங்குகின்ற தேவாரத் திருப்பதிகத்தைப் பாட பதினோராவது பாடலின் இறுதிவரியாகிய "**அடியார்கள் வானில் அரசாள்வர் ஆணை நமதே**" என்பதைப் பாடி முடிக்கும்போது தம்பிரான் சுவாமிகள் செங்கோலை நேரு அவர்களிடத்தில் வழங்கினார்கள்.

